பதிவு எண்: எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11 மதுரை 15—12—73 சனி மலர் 284

## தேயிலைத் தோட்ட கார்ப்பரேஷனில் ஊழல்

கௌஹாத்தி, டிச. 13—

அசாம் மாநில தேயிலைத் தோட்ட கார்ப்பரேஷனில் ஊழலாலும், ஒழுங்கீனங்களாலும் பெரும் நஷ்டம் ஏற்பட்டுள்ளது.

தேயிலைத் தோட்ட வளர்ச்சிக்கு அரசாங்கத்தால் அமைக்கப்பட்ட இந்த கார்ப்பரேஷனுக்குச் செயல்பட முடியாத நிலைமை ஏற்பட்டுள்ளது. இதனல் வாங்கப்பட்ட 2000 தேயிலைப் பெட்டிகள் அனுப்பப்படாமல் கிட்டங்கியிலேயே முடங்கிக் கிடக்கின்றன.

## கருங்காலிகளால் 25 பேர் சாவு!

நாகர்கோவில், டிச. 14—

குமரி மாவட்ட அரசுப் போக்குவரத்துத் தொழிலாளரின் வேலைநிறுத்தப் போராட்டத்தை உடைக்க, நிர்வாகம் வண்டி ஓட்டத் தெரியாத கருங்காலிகளை டிரைவர்களாக நியமித்துள்ளது.

இதனல் ஏற்பட்ட விபத்துக்களில் இறந்தவர்கள் எண்ணிக்கை 25 ஆக உயர்ந்துள்ளது.

# மாநகராட்சி ஊழலில் காங்கிரஸ்-திமுக கூட்டு

**சென்னை, டிச. 14-**

**சென்னை மாநகராட்சியின் ஊழல்கள் முடைநாற்றமெடுத்து வருகிறது. சாக்கடையின் சைப்பினைத் திறந்தால், அடிக்கும் நாற்றத்தைவிட, சகிக்க முடியாத நாற்றம் அடித்துக் கொண்டிருக்கிறது.**

**6½ கோடி ரூபாய் அளவுக்கு அள்ளியிருக்கிறர்கள் என்று ஒரு தகவல் கூறுகிறது. 12 கோடி என்று இன்னெரு தகவல் கூறுகிறது. 20 கோடியைத் தாண்டினலும் ஆச்சரியப்படுவதற்கில்லை என்றும் கூறப்படுகிறது.**

**இந்த ஊழலில் ஈடுபட்டவர்கள் அதிகாரிகள் மட்டுமல்ல; மாநகராட்சியை ஆண்டுவந்த தி மு க மேயர்களும் அதற்குப் பிரதான எதிர்க்கட்சியாக உள்ள பழைய காங்கிரஸ் தலைவர்களும்— ஏன் ஆளும் காங்கிரஸ் தலைவர்களும் கூட— சிக்கியிருக்கிறர்கள்.**

1961-ம்ஆண்டிலே வணக்கத்திற்குரிய மாநகரத் தந்தையாக இருந்த வி.முனுசாமியும்—அப்புறம், 1965-ம் ஆண்டிலே வணக்கத்திற்குரிய மாநகரத் தந்தையாகயாக இருந்த மைனர் மோசசும் கையாடல் பணத்தில் பங்கு போட்டிருப்பதாக லஞ்ச ஒழிப்பு போலீசாரால் கைது செய்யப்பட்டிருக்கிறர்கள்.

### எதிர்க்கட்சி தலைவர் விநாயகமூர்த்தியும்

ஆளும் கட்சிதான் வாரியங்களில் புகுந்து வாரிக்கொள்ளும் வாய்ப்பு இருக்கிறதென்றால், எதிர்க்கட்சி தலைவராக வீற்றிருக்கும் சிண்டிகேட் காங்கிரஸ தலைவர் விநாயகமூர்த்தியும் மாட்டிக் கொண்டிருக்கிறர்.

விநாயகமூர்த்தி லஞ்ச ஒழிப்பு அலுவலகத்தில் கொண்டு போய் வைக்கப்பட்டிருந்த போது, சிண்டிகேட் தலைவர் கருத்திருமன் அவரைபோய் பார்த்தாராம். கருத்திருமனைக் கண்டதும் கட்டிப் பிடித்துக் கொண்டு "ஓ" எனக் கதறினராம் விநாயகமூர்த்தி. அஞ்சற்க என்று ஆறுதல் கூறி, அவரது கண்ணீரைத்துடைத்து விட்டாராம் கருத்திருமன்.

### ராஜமன்னர்

மாட்டிக் கொண்டவர்கள் அதிகாரிகளும், ஆளும் கட்சி மேயர்களும் சிண்டிகேட் காங்கிரஸ் தலைவரும் மட்டுமல்ல, இந்திரா காங்கிரஸ் கவுன்சிலர் ராஜமன்னரும் கூட கைது செய்யப்பட்டிருக்கிறர்.

### குப்புசாமி மீது

ஏற்கனவே, சிண்டிகேட் கவுன்சிலர் கே. குப்புசாமி கைதுசெய்யப்பட்டுள்ளார். அவர் மீது ரூ. 20 ஆயிரம் லஞ்சம் வாங்கியதாகக் குற்றம சாட்டப்பட்டுள்ளது.

இது தவிர, இவர் கையாடல் பணத்தில், மாதந் தோறும் தட்சிணை வாங்கியிருப்பதாகவும் அரசாங்க வக்கீல் கூறுகிறர்.

இவரை சென்னையிலேயே ஜாமீனில் விட்டால் உருட்டுப் புரட்டு வேலைகளில் ஈடுபட்டு கணக்கைச் சரிக்கட்டி விடுவார் என்று கூறி, ஜாமீனில் விட்டு நாகர்கோவிலுக்கு அனுப்பி விட்டார்கள்.

தி. மு. க. கவுன்சிலர் சாரங்கனும் கைது செய்யப்பட்டிருக்கிறர்.

### 44 பேர் கைது

ஏற்கெனவே, மத்திய கணக்குப் பிரிவு அதிகாரிகள், குமாஸ்தாக்கள் உட்பட 39 பேர் கைது செய்யப்பட்டிருந்தார்கள்.

இப்போது வி. முனுசாமி. மைனர் மோசஸ் முதலான வணக்கத்திற்குரிய மாஜிகளும், காங்கிரஸ் விநயகமூர்த்தியும் சேர்ந்தால், கைதானவர்கள் எண்ணிக்கை 44 பேர்களாகும்.

வணக்கத்திற்குரிய முன்ளள் மேயர் முனுசாமிக்கு இருதய நோயாம். எனவே சிறையில் வைத்தால் மிகவும் பாதித்து விடுமாம். அதனல் வெளியிலே விடவேண்டுமென்று மனு செய்திருக்கிறர்.

### பிராடுகளெல்லாம் பெரிய மனிதர்கள்!

ஒரு தமிழக அமைச்சரின் உறவினர், வாராவாரம் ரூ 2000 மேனிக்கு கார்ப்பரேஷன் பணத்தை மூட்டை போட்டு வந்தாராம்!

இன்னெரு தமிழக அமைச்சரின் குடும்பத்தை சேர்ந்தவர், கார்ப்பரேஷன் பணத்தில் தன் ஆசை நாயகிக்கு வீடு கட்டிக் கொடுத்திருக்கிறராம்.

இவர்களது வீடுகளிலிருந்து ஒன்றரைலட்சரூபாய் ரொக்கம், ஏராளமான நகைகள், குளிர் சாதனப் பெட்டி முதலியவற்றைக் கைப்பற்றியிருக்கிறர்களாம்.

மாதம் 200 ரூபாய் சம்பளம் வாங்கும் ஸ்ரீராமுலு என்ற ஒரு குமாஸ்தா, அழிந்து போன நந்தவனத்திலே ஆடு மேய்ந்தாலென்ன? மாடு மாய்ந்தாலென்ன? இல்லே, கழுதையே மேய்ந்தாலென்ன?- என்று சந்தடிச் சாக்கிலே தானும் புகுந்து விளையாடி ஒரு லட்சம் ரூபாய்க்கு பங்களா கட்டி 'ஜம்'மென்று வாழ்கிறர். அவர் வீட்டில் சோதனை போட்டபோது, 15 ஆயிரம் ரொக்கமும், 15 ஆயிரத்துக்கு நகைகளும் அகப்பட்டதாம்.

தோண்டத் தோண்ட பூதம் புறப்பட்டது மாதிரி புதுப்புது ஊழல்கள், அதுவும் பயங்கர ஊழல்கள் வெளிவந்த வண்ணமாக உள்ளன.

வரிகளைக் குறைப்போம், வசதியைப் பெருக்குவோம என்று வாக்களித்து, பதவிகளுக்குப் போனவர்கள், தங்கள் வரிகளைக் குறைத்துக் கொண்டார்கள்; தங்களுடைய வசதிகளைத் தான் பெருக்கிக்கொண்டார்கள்!- என்று சென்னை நகர மக்கள் கொதிக்கிறர்கள்.

# கருணநிதிக்கு கறுப்புக் கொடி

## மதுரை மாவட்ட மாணவர் போராட்டக் குழு முடிவு

மதுரை, டிச 14—

மதுரையில் நேற்று கூடிய மதுரை மாவட்ட மாணவர் போராட்டக்குழு 15-ம் தேதி மதுரை வரும் தமிழக முதலமைச்சர் கருணநிதிக்கு கறுப்புக் கொடி காட்டுவது என்றுமுடிவெடுத்துள்ளது. போராட்டக்குழு நிறைவேற்றியுள்ள தீர்மானங்கள் வருமாறு.

பாளையங்கோட்டை கிளைவ் விடுதிச் சம்பவங்களில் நீதி விசாரணை தீர்ப்பை ஒட்டி கருணநிதி ராஜினமா செய்ய வேண்டும்.

வருகின்ற 15—12—73 அன்று மதுரை வரும் முதலமைச்சர் கருணநிதிக்கு காலேயில் கல்லூரி பள்ளி மாணவர்கள் கருப்புக் கொடி காட்டுவது என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது.

### பொய் வழக்கு

தமிழகம் முழுவதும்கைது செய்து காவலில் வைக்கப்பட்டுள்ள மாணவர்களை எந்தவித நிபந்தனையுமின்றி விடுதலை செய்யுமாறு தமிழக அரசை இக்குழு கேட்டுக் கொள்கிறது.

மாணவர்கள் மீதுபோடப்பட்டுள்ள பொய் வழக்குகளை உடனடியாக திரும்பப் பெற வேண்டும்.

இந்தப் போராட்டத்தில் அனைத்துக் கல்லூரி, பள்ளி மாணவ மாணவிகளும் கலந்து கொள்ள வேண்டுமென்று இக்குழு கேட்டுக் கொள்ளுகிறது.

1. அ. மா. பரமசிவன் அமைப்பாளர், மதுரை மாவட்ட அண்ணா தி. மா. மு. க.

2. சு. பாலதண்டாயுதபாணி செயலாளர், இந்திய மாணவர் சங்கம் (எஸ் எப். ஐ.) தமிழ மாநிலக்குழு

3, ம. க. தத்துவதுரை தாமரை செல்வன்.

அனைத்திந்திய மாணவர் பெருமன்றம், மதுரை மாவட்டக் குழு.

4. பொன்னராசு, மதுரை மாவட்ட தேசிய மாணவர் சங்கம்.

மற்றும் அனைத்துக் கல்லூரி, பள்ளித் தலைவர்களும் கலந்துகொண்டனர்.

# தேர்தல் தோல்வி: காங்கிரஸ் மேலிடம் அதிர்ச்சி

புதுடெல்லி, டிச. 12—

குஜராத் மாநிலத்தில் சபர்கந்தா தொகுதியில் நடைபெற்ற தேர்தலில் காங்கிரஸ் தோல்வியடைந்தது. காங்கிரஸ் மேலிடத்துக்கு அதிர்ச்சியை அளித்துள்ளது.

தேர்தலுக்கு சில நாட்களுக்கு முன்னர் காங்கிரஸ் பெரும் மெஜாரிட்டியுடன் வெற்றிபெரும் என்று குஜராத் முதலமைச்சர் சிமன்பாய் படேல் அறிவித்தார். இதே மாதிரி கருத்தை குஜராத் மாநிலத்தைச் சேர்ந்த பல காங்கிரஸ் எம். பிகள் தெரிவித்தனர்

இந்தத் தோல்விக்குக் காரணம் விலையேற்றத்தினலும் பொருள்கள் தட்டுப்பாட்டினலும் மக்களுக்கு ஏற்பட்டிருக்கும் சீற்றத்தை வெளிப்படுத்தியுள்ளதாக அரசியல் வட்டாரங்கள் கருத்துத் தெரிவித்துள்ளன. காங்கிரஸ் கட்சிக்குள் அதிருப்தியாளர்களின் சீர்குலைவு வேலைகளால் இந்தத் தோல்வி ஏற்பட்டவில்லை என்றும் அந்த வட்டாரங்கள் கருதுகின்றன.

—டைம்ஸ் ஆப் இந்தியா (12.12.73)

# இந்தியாவுக்குள் "மாபியா" ஸ்தாபனம் ஊடுருவ முயற்சி

புதுடெல்லி, டிச, 13—

இந்தியாவிலிருந்து கஞ்சா போன்ற போதை தரும் பொருட்களை பெருமளவில் கடத்திச் செல்வதற்கு, அமெரிக்க உளவு ஸ்தாபனத்துடன் நெருங்கிய உறவும்பிணைப்புமகொண்டுள்ள "மாபியா" என்ற ஸ்தாபனம ஈடுபட்டுள்ளது பற்றிய செய்தியின் மீது இந்திய அரசாங்கம் கவனித்து வருகிறது.

கடத்தல் வேலைக்காக வேண்டியே இந்தியாவில் ஒரு தளம் அமைக்க முயற்சிக்கும் "மாபியா" ஸ்தாபனத்துக்கு ஆதரவாக உள்ளவர்கள் குறித்து— அவர்கள் இந்தியாவுக்குள்ளிருந்தாலும் சரி இந்தியாவுக்கு வெளியே இருந்தாலும் சரி — எப்பொழுதும் உஷாராகவேஇருக்கவேண்டும் என்று, மத்தியிலும் மாநிலத்திலும் உள்ள கடத்தல் தடுப்புஅதிகாரிகளுக்கு உத்தரவு பிறப்பிக்கப்பட

( 4-ம் பக்கம் பார்க்க)

# சிறுபான்மை மொழி பேசும் மக்களுக்கு பாதுகாப்பு அளிப்பீர்

## மார்க்சிஸ்ட் கட்சி மகாராஷ்டிர மாநிலக் கமிட்டி அறிக்கை

பம்பாய். டிச, 12—

பெல்காம் மாவட்டத்தில் மராத்தி மொழி பேசும் மக்கள் மீது சமூக விரோத சக்திகளின் தாக்குதலை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியின் மகாராஷ்ர மாநிலக் கமிட்டி வன்மையாகக் கண்டித்துள்ளது.

கர்நாடக மாநிலத்திலுள்ள இடதுசாரி ஜனநாயக சக்திகள் இத்தகைய அட்டூழியங்களுக்கு எதிராக குரல் எழுப்பவேண்டும் என்றும் மராத்தி மொழி பேசும் மக்களுக்கு ஆதரவாக நிற்க வேண்டும் என்றும் கடந்த செவ்வாயன்று கட்சியின் மகாராஷ்டிர மாநிலச் செயலாளர் தோழர் எஸ். ஒய், கோல்ஹாட்கர்விடுத்துள்ள செய்தியில் கோரியுள்ளார்

இதற்காக மகாராஷ்டித்தில் கன்னடமொழி பேசும் மக்களைப் பழிவாங்குவது நியாயமல்ல என்றும் கன்னட மொழிபேசும் மக்களுக்குப் பாதுகாப்பாக இருக்கவேண்டியது இடதுசாரி கட்சிகளின் கடமையாகும் என்றும் அவர் கூறியுள்ளார்.

# 500 ரூபாய்க்கு வேலை வாங்கிக் கொடுக்கும் சிண்டிகேட் எம். எல். ஏ.

நாகர்கோவில். டிச. 14—

அக்டோபர் 15-ம் தேதி துவங்கிய குமரி மாவட்ட அரசுப் போக்குவரத்துத் தொழிலாளர் போராட்டத்தை உடைப்பதற்கு தி மு க வும் சிண்டிகேட் காங்கிரஸ் கட்சியும் போட்டி போட்டு வேலை செய்கின்றன.

சிண்டிகேட் எம் எல் ஏ, ஒருவர் வேலையில்லாத இளைஞர்களிடம் தலா ரூ. 500 பெற்றுக்கொண்டு போக்கு வரத்து துறை நிர்வாகிக்கு சிபாரிசு கடிதம் கொடுக்கிறர் என்றும் எம் எல் ஏயின் கடிதத்தைப் பெற்றுக்கொண்டு அதிகாரிகள் கருங்காலிகளை நியமனம் செய்கின்றனர் என்றும் மக்கள் பேசிக் கொள்கின்றனர்.

இதில் வேடிக்கையான அம்சம் என்னவென்றல் கருங்காலிகளுக்குத் தட்டுப்பாடு ஏற்பட்ட போது அவர் டாக்சி எடுத்து ஊர் ஊராகச் சென்று சிண்டிகேட் இளைஞர்களைப் பிடித்து கருங்காலிகளாக நியமிக்க போக்குவரத்துத் துறையிடம் ஒப்படைத்தாராம்.

இப் பிரச்சனையில் சிண்டித்தலைவர் ஒருவருக்கும் அவருக்கும் தகராறு மூண்டுள்ளதாகவும் குமரி மாவட்டமெங்கும் பேசப்படுகிறது.

போராட்டம் முடிந்து பழைய ஊழியர்கள் வேலைக்குத் திரும்பும் போது 500 ரூ கொடுத்து வேலை பெற்ற கருங்காலிகள் பாடும், அவர்களுக்கு வேலை வாங்கிக் கொடுத்த சிண்டி எம். எல். ஏ. பாடும் திண்டாட்டம்தான்!

# மாநாட்டுப் பிரதிநிதிகளை வரவேற்க மாபெரும் ஏற்பாடுகள்

தோழர்களே!

சென்னையில் இம்மாதம் 20 முதல் 23-ம் தேதி தேதி முடிய நடைபெறவிருக்கும் சி. ஐ. டி. யூ. மாநாட்டை, சிறப்பாகவும் வெற்றிகரமாகவும் கலைப்பொலிவுடனும் நடத்துவதற்கு, சென்னை நகரத் தொழிலாளி வர்க்கத் தலைவர் தோழர் வி. பி. சிந்தன் தலைமையில் அமைந்த வரவேற்புக்குழு அரும்பாடுபட்டு வருகிறது.

மாநாட்டுச் செலவுகளுக்காக ரூ. 20 ஆயிரம் நிதி வசூலித்து வருகிறர்கள். தமிழக முழுவதிலுமுள்ள தொழிலாளி வர்க்கத்தின் மிகச்சிறந்த பிரதிநிதிகளையும் பாட்டாளி மக்களையும் வரவேற்று உபசரிக்க, நல்லதோர் வாய்ப்பு ஏற்பட்டதென்ற மகிழ்ச்சியோடும் பெருமையோடும் சென்னை செங்கற்பட்டு மாவட்டத் தொழிலாளர்கள் தாராளமாக நிதி உதவி அளித்து வருகிறர்கள்.

சி ஐ டி யூ மாநாட்டின் முக்கியத்துவத்தை விளக்கியும் - இன்றைய நாட்டு நிலைமை பற்றியும் சென்னை நகரின் ஒவ்வொரு வட்டத்திலும் பிரச்சாரப் பொதுக் கூட்டங்களும், கலை நிகழ்ச்சிகளும் ஜமாய்த்துக் கொண்டிருக்கின்றன.

மாநாட்டுத் தொண்டர்களும், தொழிற்சங்க ஊழியர்களும் வட்டங்கள் தோறும், போட்டி போட்டுக் கொண்டு வசூல் செய்வதிலும் பிரச்சாரம் செய்வதிலும் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறர்கள்.

### கலை நிகழ்ச்சிகளோடு...

சென்னை தர்மப்பிரகாஷ் கல்யாண மண்டபத்தில் மாநாடு நடைபெறுகிறது. பிரதிநிதிகளுக்கு கலை நிகழ்ச்சிகளும், திரைப்படக்காட்சிகளும், மாநாட்டு நிகழ்ச்சிகளின் போது இடையிடையே இசை விருந்துகளும் ஏற்பாடாகியுள்ளன.

### தலைநகரை நோக்கி பஸ்கள் புறப்படும்

மாநாட்டின் ஊர்வலத்திலும், பொதுக் கூட்டத்திலும் பங்கு கொள்ள பல்லாயிரக் கணக்கணக்கான தொழிலாளர்கள் ஆர்வமாக இருப்பதால், ஒவ்வொரு மாவட்டத்திலுமுள்ள சிஐடி யூ தலைவர்கள் அதற்கான பஸ் வசதிகளைச் செய்வதில் ஈடுபட்டிருக்கிறர்கள்.

இதுவரை கிடைத்த தகவலின்படி, மதுரை—இராமநாதபுரம் மாவட்டங்களிலிருந்து 60க்கு மேற்பட்ட பஸ்கள் அமர்த்தப்பட்டுள்ள.

வடாற்காடு மாவட்டத்திலிருந்து, 10 பஸ்கள் அமர்த்தப்பட்டுள்ளன.

சேலம் மாவட்டத்திலிருந்து, 15 பஸ்கள் அமர்த்தப்பட்டுள்ளன.

திருச்சி மாவட்டத்திலிருந்து, 19 பஸ்கள் அமர்த் தப் பட்டுள்ளன.

தென்னர்காடு மாவட்டத்திலிருந்து, 25 பஸ்கள் அமர்த்தப்பட்டுள்ளன.

நானூற்று ஐம்பது மைல் தொலைவிலுள்ள குமரி மாவட்டத்திலிருந்து 2 பஸ்களிலும் நெல்லை மாவட்டத்திலிருந்து 5 பஸ்களிலும் வருகிறர்கள்.

தஞ்சை மாவட்டத்திலிருந்து 2000 பேர் அணி வகுதது வருவார்கள் என்று தகவல் கிடைத்திருக்கிறது.

இன்னும் பஸ்கள் அமர்த்தப்பட்டு வருகின்றன.

### ஊர்வலமும் பொதுக்கூட்டமும்

மாநாட்டின் கடைசி நாளான 23-ந் தேதி மாலையில் மாபெரும் அணிவகுப்பு ஊர்வலம் சென்னை நகருக்கே உரித்தானகலையழகுடன் ஆட்டபாட்டங்களோடு பிரம்மாண்டமாகப் புறப்படும்.

அன்று இரவு திருவல்லிக்கேணி கடற்கரையில் சீரணி மேடையில் ஜனசமுத்திரப் பொதுக் கூட்டம் நடைபெறும்.

எண்ணற்ற போராட்டங்களில் விழுப்புண் ஏற்று —செழிப்பு மிக்க அனுபவங்களோடு — உற்சாகம் பொங்க, செங்கடலெனத் திரண்டுவரும் பாட்டாளி வர்க்கப் பட்டாளங்களை, வரவேற்க சென்னை நகரப் பாட்டாளிகள் திரண்டு நிற்கிறர்கள்.

புறப்படுங்கள் தோழர்களே,  
செங்கொடி ஏந்தி!  
சிகப்புச் சட்டை அணிந்து!  
வெற்றி முழக்கமிட்டு!  
வீர நடை போட்டு!

# தீக்கதிர்

## ஜனநாயக வழியை மறுப்பது ஏன்?

மொழி வழி மாநிலங்கள் அமைக்கப்பட்ட போது, பல எல்லைப் பிரச்சினைகளை தீர்க்காமலேயே விட்டதின் விளைவுகளை இன்றைக்கும் இந்நாடு அனுபவிக்கிறது. இன்று நடைபெறும் மகாராஷ்டிர — கன்னட எல்லைத் தகராறுகளும் மோதல்களும் இதற்கு உதாரணங்கள்.

இந்த நாட்டு மக்களது முக்கியமானதொரு ஜனநாயக கோரிக்கை மொழிவழி மாநிலப்புரனமைப்பு. காங்கிரஸ் ஆட்சியாளர்களை இதை ஏற்க வைப்பதற்கே இந்நாடு தழுவிய பிரம்மாண்டமானதொரு போராட்டம் நடத்த வேண்டியிருந்தது.

இதற்காகப் போராடிய நூற்றுக்கணக்கானவர் கொல்லப்பட்டனர். பல்லாயிரக்கணக்கில் மக்கள் சிறைக்குள் தள்ளப்பட்டனர். கொள்கையளவில் மொழிவழி மாநிலப் புனரமைப்பை காங்கிரஸ் ஏற்றுக் கொண்டபோதிலும், அதை முழுமையாக அமுல் நடத்தத் தவறியதன் விளைவே மகாராஷ்டிரா — கன்னட எல்லைத் தகராறுகளாகவும் மோதுதல்களாகவும் நாட்டை அலக்கழிக்கின்றன. சீர்குலைக்கின்றன.

மராட்டியத்தில் ஆட்சிபுரிவது யார்? காங்கிரஸ்காரர்கள். கன்னடத்தில் கோலோச்சுவோர் யார்? காங்கிரஸ்காரர்கள். இவர்கள்தாம் இந்த எல்லைத் தகராறுகளுக்கு மூல காரணம்.

கருநாடக மாநிலத்திலுள்ள பெல்காம் மாவட்டத்தில் மராட்டிய மொழி பேசுவோர் பெரும்பான்மையாக உள்ள பகுதிகள் நிறைய உண்டு. அதேபோல் மராட்டிய எல்லைகளில் கன்னட மொழி பேசுவோர் பெரும்பான்மையாக உள்ள பகுதிகளும் பல உண்டு.

இந்த பிரச்சினையைத் தீர்க்கும் ஜனநாயக வழி எது?

மாவட்ட ரீதியாகவோ, அல்லது தாலுகா ரீதியாகவோ எல்லைப் பிரச்சினைகளைத் தீர்க்கவே முடியாது. எல்லையோரங்களில் சம்பந்தப்பட்ட இருமொழி பேசும் மக்களை கிராம அடிப்படையில் கணக்கெடுத்து, எந்தெந்த கிராமங்களில் குறிப்பிட்ட மொழியினர் மெஜாரிட்டியாக இருக்கிறார்கள் என்பதை முடிவு செய்ய வேண்டும்.

இத்தகைய மெஜாரிடி மொழி பேசும் கிராமங்கள் சம்பந்தப்பட்ட அதே மொழிவழி மாநிலத்துடன் தொடர்பாக அடுத்தடுத்து இருக்குமானால், அவைகளை அந்த மாநிலத்துடன் இணைக்க வேண்டும்.

இதுதான் கம்யூனிஸ்ட் இயக்கம் இந்தியஆட்சியாளர்களிடம் வற்புறுத்திய ஜனநாயக வழி.

ஆனால் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் இந்தப் பிரச்சினைக்கு தீர்வு காணும் நோக்கத்துடன் இதுவரை செயல்படவே இல்லை.

இதே பிரச்சினையில் சம்பந்தப்பட்ட மக்களிடையே கலவரங்கள் மூளுவதும் அவற்றை சட்டம் ஒழுங்கு பிரச்சினையாகக் கணித்து போலீஸ் வெறியாட்டத்தைக் கட்டவிழ்த்து விட்டு மக்களைக் கொன்று குவிப்பதும் அதன் மூலம் எல்லைச் சச்சரவை மேலும் தீவிரமாக்கி நெருப்பு பற்றி எரியச் செய்வதும் அவர்களது கொள்கையாகி விட்டது.

உடனடியாகத் தீர்க்கப்படவேண்டிய மக்களதுவாழ்க்கைப் பிரச்சினைகளிலிருந்து திசை திருப்புவதற்கு இப்படிபட்ட எல்லைப் பிரச்சினைகளைப் பயன்படுத்துவதே காங்கிரஸ் ஆட்சியாளர்களின் நடைமுறைக் கொள்கையாக உள்ளது.

இந்துமதக் கடவுள்களை ஒழிக்க வேண்டும்—இது ஒரு சிலரது கூக்குரல். இதை எதிர்த்துக் கடவுள் பக்தர்கள் கிளர்ச்சி. இது ஒரு இயக்கம்.

சாதிகளைப்பற்றி கருத்துரை வழங்குவார் ஒருவர்.

ஓகோ என் சாதியை இழிவுபடுத்தி விட்டார். ஆகவே அவரது சிலைகளை உடைப்போம்—இதற்காக ஒருமாநாடு—இயக்கம்—போராட்டம்.

இவ்வாறாக எல்லைச் சண்டைகளை மூட்டி விடுவதிலிருந்து பல ரகமாமான திசைதிருப்பும் வேலைகளில் ஈடுபடுகின்றனர் பலபிற்போக்காளர்கள். இவர்களது கிளர்ச்சிகளும், போராட்டங்களும் மக்களது உண்மையான நல்வாழ்வுக்கான போராட்டங்களை திசை திருப்பப் பயன்படுவதால் ஆட்சியாளர்களே தங்களுடைய நடைமுறை அணுகும் முறையால் திட்டமிட்டே இவைகளுக்கு ஊக்கமளிக்கின்றனர்.

இல்லையென்றால், கன்னட—மராட்டிய எல்லைப் பிரச்சினைகளைத் தீர்க்கும் சரியான ஜனநாயக வழியிலிருந்தும் ஏன் அதைப் பின்பற்றவில்லை?

## 'மாபியா' உஷார்!

கஞ்சா போன்ற போதைப்பொருள்களை கள்ளக் கடத்தல் செய்து அமெரிக்க உளவு இலாகாவுடன் நெருக்கமான உறவு வைத்துக்கொண்டு அதன் எதிரி நாட்டு மக்களை மயக்கி பல ஸ்தாபனங்களையும் கைக்குள் போடப் பயன்படும் சர்வதேசக் கள்ளக் கடத்தல் ஸ்தாபனமே **மாபியா** என்பது.

இந்த ஸ்தாபனம் தன்னுடைய கள்ளக் கடத்தல் வேலைகளுடன் அமெரிக்க உளவு இலாக்கா யார் யாரை எல்லாம் ஒழித்துக்கட்டவிரும்புகிறதோ, அவர்களை 'பைசல்' பண்ணும் வேலைகளிலும் ஈடுபடும் ஒரு கொலைகார கொள்ளைக்கூட்ட அமைப்பு.

இது தன்னுடைய வேலைகளை இந்தியாவில் துவங்குவதற்காக சமீபத்தில் முக்கிய நபர் ஒருவர் அமெரிக்காவிலிருந்து இந்தியாவிற்கு விஜயம் செய்தார். அவர் 'மாபியா' ஸ்தாபனத்தை இங்கு உருவாக்க லட்சக்கணக்கான ரூபாய்களை செலவிட்டுள்ளதாக ஒரு செய்தி வந்துள்ளது.

இந்தியா வெளிநாடுகளுக்கு ரூ. 12½ கோடி பெறுமானமுள்ள கஞ்சா ஏற்றுமதி செய்கிறது. இது குறிப்பாக அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் செல்கிறது. இதை கள்ளத்தனமாக அதிகரித்திடவும், இதை மையமாகக் கொண்டு, தன் வேலைகளை இங்கு துவக்கவுமே இங்கு மாபியா' வருகிறது.

இந்திய அரசுக்கு இந்த உண்மை தெரிந்திருந்தும் நடவடிக்கை எடுக்கவில்லை. காரணம் என்ன?

அமெரிக்காவுடன் உள்ள நட்புறவு கெட்டுவிடும் என்ற அச்சமா?

நம் நாட்டின் சுதந்திரத்தைவிட, அதற்கு வேட்டு வைக்கச் சதி புரியும் நம் நாட்டின் எதிரிகளுடன் நட்புக் கொள்வது முக்கியம் என்று இந்திய அரசு கருதுகிறதா?

## குமரி மாவட்ட விவசாயிகள் சங்க 4வது மாநாடு

### செங்கடலென ஊர்வலம் பொதுக்கூட்டம்

குழித்துறை, டிச. 10—

விவசாயிகள் சங்கத்தின் குமரி மாவட்ட 4-வது மாநாடு நேற்று புத்தன் சந்தையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இம் மாநாட்டிற்கு தோழர் ஜி எஸ் மணி (மாவட்ட வி.ச தலைவர்) தலைமை வகித்தார் தோழர் பாரதிமோகன் (மாநில கமிட்டி உறுப்பினர்) வாழ்த்துரை வழங்கினர். இம் மாநாடு பற்றிய விவரங்கள் வருமாறு: —

நேற்று காலை 11-25 மணிக்கு மாவட்ட விவசாயிகள் சங்கத் தலைவரும், கட்சியின் பழம்பெரும் தலைவர்களில் ஒருவருமான தோழர் ஜி. எஸ். மணி மாநாட்டுப் பந்தலில் கொடியேற்றி வைத்த பின்னர் புத்தன் சந்தை 'வெண்மணி தியாகிகள் நகரில்' தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தி பிரதிநிதிகள் மாநாடு ஆரம்பமானது.

மாநாட்டில் 98 பிரதிநிதிகளும், 18 பார்வையாளர்களும் கலந்துக் கொண்டனர்.

மாநாட்டுக்குத் தோழர் ஜி. எஸ். மணி தலைமை வகித்து உரையாற்றுகையில் குமரி மாவட்ட விவசாயிகள் சங்கம் சென்ற 25 ஆண்டுகளாக ஸ்தாபன ரீதியில் விவசாயிகளை திரட்டி புறம்போக்கு நிலங்களில் வாழ்வோருக்கு பட்டா கிடைப்பதற்காகவும், உழுபவனுக்கு நிலம் கிடைப்பதற்காகவும், கூலி உயர்வுக்காகவும், விலைவாசி உயர்வுக்கு எதிராகவும் நடத்திய போராட்டங்களை விவரித்தார்.

மேலும் அவர் தனது உரையில் விவசாயிகள் சங்கம் கட்டி எழுப்பும்போது நாம் கிராமப்புற வர்க்கங்கள் பற்றி தெளிவான கண்ணோட்டத்துடன் இயங்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

### பாரதிமோகன் துவக்கஉரை

தோழர் பாரதி மோகன் துவக்க உரையாகப் பேசியதாவது:—

கடந்த 25 வருட கால நீண்ட பாரம்பரியம் உடையது உங்கள் சங்கம். விவசாயிகள் மத்தியில் செயல்பட்டு நிரம்ப அனுபவம் பெற்ற தோழர்கள் இங்கு பிரதிநிதிகளாக வந்துள்ளீர்கள். ஆனால் இன்று வரை நாம் நடத்திய இயக்க வேலைகளை இன்றிலிருந்து புதுமைப்படுத்தித் தீவிரப்படுத்த வேண்டும். நாம் படிப்படியாக கோரிக்கைகளை வைத்து விவசாயிகளை நம் அணியில் திரட்டிட வேண்டும்.

இன்று புலம் வாய்ந்த இயக்கம் இருக்கும் தஞ்சாவூர் மாவட்டத்தில் 1946 லிருந்து 56 வரையிலான காலகட்டத்தில் பாட்ட விவசாயிகளுக்காக — குத்தகை விவசாயிகளுக்காகத் தான் சங்கம் போராடியது. பின்னர் வாரச்சாகுபடிப் போராட்டமும், படிப்படியாக 10 மூடை நெல் கிடைத்தால்' மிராசுதாருக்கு 7 மூட்டையும். சாகுபடி செய்வோருக்கு 3 மூட்டை என்றும், அதன் பின்னர் மிராசுதாருக்கு 6 மூட்டையும், சாகுபடியாளருக்கு 4 மூடை என்றும் கோரி போராட்டம்நடத்தப் பட்டது. பின்னர் சாகுபடி செய்வோருக்கு 7 மூடையும், மிராசுதாருக்கு 3 மூடையும் என்ற நிலை ஏற்பட்டது. அதன் பிறகுதான் அரசு 10 மூடை நெல் கிடைத்தால் சாகுபடி செய்வோருக்கு 6 மூடையும், மிராசுதாருக்கு 4 மூடை என்று சட்டம் வகுத்தது. படிப்படியான போராட்டத்தினால் கிடைத்த பலன்தான் இது.

தஞ்சாவூரில் ஒரு காலத்தில் விவசாயத்தொழிலாளி கூலியாகக்கூட நடத்தப்படவில்லை, பண்ணையாளாகவே நடத்தப்பட்டான். அவன் பிள்ளைகளும், மனைவியும்கூட மிராசுதார்களின் அடிமைகளாகவே நடத்தப்பட்டனர்.

இதற்கெதிரான போராட்டம் தீவிரப்படுத்தப்பட்டதனால்தான் தஞ்சாவூர் மாவட்டத்தில் மட்டும் பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் அமுலுக்கு வந்தது. இன்று மிராசுதார் நினைத்த நேரத்தில் தனது பண்ணையாளை வெளியேற்றிவிட முடியாது.

இதே போன்று தஞ்சையில் கூலிக்கான போராட்டங்கள் நடத்தப்பட்டதினால்தான் கீழத் தஞ்சாவூரில் மட்டும் ஏற்கனவே கூலி நிர்ணயச் சட்டம் அமலுக்கு வந்தது. இந்தப் போராட்டப் படிப்பினைகளை நாம் ஆழ்ந்து படித்து இம்மாநாட்டில் நிறைவேற்றப்படும் ஒவ்வொரு கோரிக்கைகளுக்காகவும் ஒவ்வொரு இயக்கம் நடத்தப்பட வேண்டும்.

இந்த இயக்கம் - போராட்டம் நடத்தப்படும் போது நம்மோடு யாரைச்சேர்த்துக் கொள்வது, நம் நண்பர் யார், பகைவன் யார் என்ற தெளிவு நமக்கிருக்க வேண்டும். விவசாயத் தொழிலாளி, பாட்ட விவசாயி, கொஞ்ச நிலம் வைத்து அந்த நிலத்தில் இறங்கி உழைக்கும் சின்ன மிராசுதார்கள் இவர்களை ஓரணியில் திரட்ட வேண்டும். தொழிலாளி வர்க்கம் உறுதியான நீண்ட போரட்டங்களை நடத்தும் மாவட்டம் இது. போராடும் கேரள மக்கள் உங்கள் பக்கத்தில் உள்ளனர். இந்த வீச்சுக்கள் விவசாயிகள் போராட்டத்துக்குச் சிறப்பான வழி காட்டும். போராடும் தொழிலாளர்களுடன் கை கோர்த்து விவசாயிகளும் போராட்டக் களத்தில் இறங்க வேண்டும். இந்தக் கண்ணோட்டத்துடன் மாநாட்டில் விவாதங்கள் நடைபெற வேண்டும். தீர்மானங்கள் நிறைவேற்றப்பட வேண்டும் என்று கூறி தோழர் பாரதிமோகன் தனது துவக்க உரையை முடித்தார்.

### செயலாளர் அறிக்கை

பின்னர், மாவட்ட விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் பி. திவாகரன் அறிக்கை சமர்ப்பிக்கவே அதன் மீதான விவாதம் துவங்கியது. இந்த விவாதத்தில் தோழர்கள் சி. பாலஸ், பொன்னுபிள்ளை, என். புஷ்பாகரன், பி. மதுரய்யன். பி. கோபாலகிருஷ்ணன். ஆர். பரமேஸ்வரன் பிள்ளை, எஸ். தங்கப்பன். ஆப்ரகாம், ராஜேந்திரபாபு, ராகவன், சிம்சன், நோகா, எம்.மாதேவன்பிள்ளை" ஆகிய தோழர்கள் கலந்துக் கொண்டனர்.

விவாதங்களுக்கு செயலாளர் திவாகரன் பதிலளித்துப் பேசிய பின்னர் புதிய மாவட்டக்குழு தேர்ந்தெடுக்கப்பட்டது. மாவட்டக்குழு உறுப்பினர்களின் பெயர் விவரம்வருமறு- புஷ்பாகரன் எஸ். நடராஜன். பி. நடராஜன், ஏ,எஸ். கிருஷ்ணன் குட்டி, பி. குட்டப்பன் நாயர், ஆப்ரகாம், என்.ராமசந்திரன். எஸ். தங்கப்பன், வி. தேவசகாயம். எம். ஓ. சுந்தர், ஏ. பரமேஸ்வரன் நாடார், கவிஞர்ராதாகிருஷ்ணன், என். அச்சுதன், வன்னியூர் சசி, பி.கோபாலகிருஷ்ணன், ஜி.எஸ். மணி, பி. திவாகரன்

மற்றும் பி. திவாகரன், ஏ. எஸ். கிருஷ்ணன்குட்டி, பி. நடராஜன். எஸ். நடராஜன், ஆப்ரகாம், பரமேஸ்வரன் நாடார், எஸ். தங்கப்பன் ஆகிய எட்டு தோழர்கள் பழநியில் நடைபெறும் மாநில விவசாயிகள் சங்க மாநாட்டுப் பிரதிநிதிகளாகவும், புஷ்பாகரன், துரைசாமி ஆகியோர் பார்வையாளர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### வாழ்த்துரை

பின்னர் தோழர் பாரதீமோகன் மாநாட்டை வாழ்த்திப் பேசியதாவது.

இம்மாநாட்டில் செழுமையான ஆழமான விவாதம் நடைபெற்றது. நாம் விவசாயிகளுக்கு கூலியும் நிலமும் வாங்கிக் கொடுத்தால் மட்டும் போதாது. அரசியல் உணர்வையும் ஊட்ட வேண்டும். நூறு நூருண்டு காலமாக நிலப்பிரபுத்துவம் தான் இங்கிருந்தது. கிராமப்புறங்களில் நிலப்பிரபுக்களும் நகரங்களில்முதலாளிகளும் சேர்ந்து இந்த நாட்டைசுரண்டிக் கொழுத்தனர். இந்தியா ஒரு விவசாய நாடு. இந்த நாட்டின் விவசாயத் தொழிலாளிக்கு — விவசாயிக்கு விடிவு காலம் ஏற்படவேண்டுமென்றால் இங்கொரு விவசாயப்புரட்சி நடைபெற்றாக வேண்டும். இங்கு ஒரு சிலர் கைகளில் குவிந்துக் கிடக்கும் நிலத்தை நாம் கைப்பற்றி உழைப்பவனுக்குப் பங்கிட்டுக் கொடுக்கும் புரட்சி நடத்தப்பட வேண்டும். அந்த போராட்டத்துக்கான ஆரம்ப கட்டம்தான் கூலிக்கான போராட்டம். தோழர் பாரதீமோகன், தொடர்ந்து தெலுங்கானவில் விவசாயிகள் நிலத்துக்காக ஆயுதமேந்தி ஐதராபாத் நிஜாமுக் கெதிராகவும், பின்னர் காங்கிரஸ் அரசின் இராணுவத்துக்கெதிராகவும் நடத்திய போராட்டத்தை விளக்கியும், கேரளாவிலும் வங்காளத்திலும்மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையிலான அரசுகள் நிறைவேற்றிய நிலச்சீர்திருத்தச் சட்டங்களை காங்கிரஸ் அரசும், அச்சுதமேனன் அரசும் குழித்தோண்டிப் புதைக்கமுற்படுவதைவிளக்கியும் பேசினர். மேலும் அவர் பேசுகையில் காங்கிரஸ் அரசும் தி.மு.க. அரசும் இயற்றும் விவசாயிகள் பற்றியச் சட்டங்கள் விவசாயிகளை ஏய்க்கும் சட்டங்கள் தான் என்றும், நிலப்பிரபுத்துவ வர்க்கங்களின்கையாட் ஆட்சி பீடத்தில் இருப்பது தான் அதற்குக் காரணமென்றும் இந்த ஆட்சி தொடரும் வரையில் விவசாயிகள் இம்மி அளவு நிலம் கூட பெறமுடியாது என்றும் விளக்கிப் பேசினர்

இறுதியாகத்தோழர் பாரதீமோகன், ரஷியாவிலும், சீனாவிலும் நடைபெற்ற புரட்சியில் விவசாயிகள் வகித்த பங்கு பற்றியும் 44 பேர்கள் தீயிட்டுகொளுத்தப்பட்ட பின்னரும்நூற்றுக் கணக்கானோர் மீது பொய் வழக்குகள் சுமத்தப்பட்ட பின்னரும் தஞ்சையில் விவசாயிகள் உறுதி குலையாது, அரசியல் உணர்வு பெற்று வர்க்கப் போராட்டத்தைத் தீவிரமாக நடத்துவது பற்றியும் விளக்கி இதே 'போன்ற உறுதியான சங்கம் குமரி மாவட்டத்திலும் உருவாக்க வேண்டும் என்று கூறி முடித்தார்.

### செங்கடலென ஊர்வலம்

மாலை 6 மணி அளவில் மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து லாரிகளிலும், கால்நடையாகவும் வந்து குவிந்த விவசாயிகள் மேல்புறம் சந்திப்பிலிருந்து பிரமாண்டமான ஊர்வலம் நடத்தினர். மேல்புறம் சந்திப்பிலிருந்து புத்தன்சந்தை மைதானம் வரையிலும் சிகப்புத் தோரணங்களாலும், கொடிகளாலும்அலங்கரிக்கப்பட்டிருந்தது.

போக்குவரத்து தொழிலாளர் போராட்டம் காரணமாக பஸ் போக்குவரத்து இல்லாமலிருந்தும் ஆயிரக்கணக்கான மக்கள் ஊர்வலத்திலும், பொதுக்கூட்டத்திலும் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கதாகும்.

ஊர்வலத்தில் பல்வேறு கலாநிகழ்ச்சிகளும்நடத்திக் காட்டப்பட்டன. ஊர்வலத்துக்கு தோழர்கள் ஜி. எஸ் மணி, பி.திவாகரன், குட்டப்பன் நாயர், கோவிந்தன் தம்பி, ஆகியோர் தலைமை வகித்தனர்: ஊர்வலம் புத்தன் சந்தை மைதானத்தில் முடிவுற்றபோது மைதானம் ஆயிரக்கணக்கான ஆண்-பெண்களால் நிரம்பி வழிந்தது.

### பொதுக்கூட்டம்

நாகர்கோவில் தோழர் காந்தி, புரட்சிப் பாடல் இசைக்க, தோழர் ஜி. எஸ். மணி தலைமையில் ஆரம்பமான பொதுக்கூட்டத்தில் தோழர்கள் ஏ.எஸ். கிருஷ்ணன்குட்டி பி. திவாகரன். மோகனசந்திரன், (தீக்கதிர்). ஜி.பாரதீமோகன் ஆகியோர் உரையாற்றினர்கள்.

போராடும் போக்குவரத்துத் தொழிலாளர்களுக்கு ஆதரவு தெரிவிப்பதுட்பட மாநாட்டில் பல்வேறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. தோழர் தங்கப்பன் நன்றி கூற பொதுக்கூட்டம் முடிவுற்றது. பின்னர் வேர்வையின் விலை' என்ற மலையாள நாடகமும். அருமனை நவோதயா கலாகோஷ்டியினரின் இன்னிசை நிகழ்ச்சியும் சிறப்புற நடந்தது.

## நடுக்கடலில்

## தவித்துக்கொண்டிருப்போரை காப்பதில் அதிகாரிகள் அலட்சியம்

விசாகப்பட்டினம், டிச. 18—

சமீபத்தில் வங்காளவிரிகுடாக் கடலில் புயலில் சிக்கிக் கொண்ட சோணவதி என்ற கப்பலையும் அக்கப்பலுக்குள்இருந்தவர்களையும்காப்பாற்றுவதில் இந்திய அதிகாரிகள் அசிரத்தையும் அலட்சியமும், காட்டினர்என அக்கப்பலில் உள்ளவர்களை காப்பாற்றுவதில் பங்குகொண்ட கிரேக்க கப்பல் கேப்டன் எம்மானுவேல் செலிமிஸ் என்பவர் கூறினர்.

### அதிகாரிகளின் அலட்சியம்

புயலில் சிக்கிக்கொண்ட கப்பலில் உள்ளவர்கள் தங்களுக்கு எவ்வித உதவியும் கிடைக்காமல் தண்ணீரில் குதித்து விட்டனர். தண்ணீரில் குதித்தபின் 26 மணி நேரம் கழித்தே அவர்களைக் காப்பாற்ற விமானங்கள் வந்தன. இவ்விதமான அசிரத்தையால் மொத்தம் 38 பேர்களில் 10 பேர் சாக நேர்ந்தது என்றும் புயலில் சிக்கிக் கொண்டவர்களைக் காப்பாற்றுவதில் இவ்வளவு அசிரத்தை காட்டியதை தான் பார்த்ததேயில்லை என்றும் கூறினர்.

### இதுவரை 15 தடவை

சரியான நேரத்தில் விமானம் வந்து சரியான வழியை புயலில் சிக்கிக் கொண்ட கப்பலுக்குகாட்டினால் 4 மணி நேரத்தில் கப்பலையும் அதில் உள்ளவர்களையும் காப்பாற்ற முடியும்' வீணாக 10 பேர் உயிர் இழக்கத்தேவையில்லை என்றுக் குறிப்பிட்டார்.

தான் இதுவரை இம்மாதிரியான நெருக்கடியான நிலையில் உள்ள கப்பல்களை காப்பாற்றும் வேலைகளில் 15 தடவை ஈடுபட்டுள்ளதாகவும், ஆனால் இதுபோல் அசிரத்தையையும் அலட்சியத்தையையும் எங்கும் தான் கண்டதில்லை என்று அவர் குறிப்பிட்டார்.

### ப கத்தில் இருந்தும்

புயலில் சிக்கிக்கொண்ட கப்பலில் இருந்து விசாகப்பட்டிணம் 155 மைல் தூரத்திலும் சென்னை 275 மைல் தூரத்திலும். கல்கத்தா 500 மைல் தூரத்திலும்தான் உள்ளன. ஆனால் குறிப்பிட்ட நேரத்திற்கு ஒரு கப்பலோ விமானமோகூட வரவில்லை என்றார் அவர்.

அவர் மேலும், தான் இவ்விஷயத்தைப்பற்றி, ஒரு இந்தியனல்லாதவன் என்ற முறையில் பேசவில்லை, என்றும் தான் ஒரு கப்பலோட்டி என்ற முறையில் கப்பலோட்டிகளுக்காக— அவர்கள் எந்த நாட்டவராக இருந்தாலும்—குறிப்பிடுவதாகவும் கூறினர்.

அவருடைய கப்பல், புயலில் சிக்கிக்கொண்ட கப்பலிலிருந்து குதித்தவர்களை காப்பாற்றும் பணியில் ஈடுபட்டதால், விசாகப்பட்டினத்தில் அவருடைய கப்பலிருந்து சரக்குகளை இறக்குவதில் பிந்திவிட்டது,



## ஈரானின் ஏல விற்பனையில் எண்ணை விலை 5மடங்கு உயர்வு

புதுடில்லி, டிச. 13—

ஈரான் நாட்டில் எண்ணை விற்பனை முறையை ஏல விற்பனை முறையில் மேற்கொள்வதால் 3·5டாலருக்கு (சுமார் ரூ. 26) விற்ற ஒரு பேரல் எண்ணை 16 டாலரிலிருந்து 17டாலர்வரைக்கும் (ரூ. 20லிருந்து ரூ. 130 வரை) உயர்ந்து விட்டது. இவ்வுயர்வு இந்திய பெட்ரோலிய இலாகாவுக்கு அதிர்ச்சியளித்துள்ளதாம்.

ஏல விற்பனை முறையில் பேரல் ஒன்றுக்கு 10 முதல் 12 டாலர் வரை உயர்ந்துள்ளது.

### செலவு கூடும்

ஏல விற்பனையில் கேட்கப்பட்டுள்ள விலைகளையெல்லாம் கணக்கில் எடுத்துக் கொண்டு விலைகளை நிர்ணயிப்பது என்பது டிசம்பர் 27-ல் எண்ணை உற்பத்தி செய்யும் நாடுகள் முடிவு செய்யவிருக்கின்றன.

ஒரு பேரல் எண்ணை 15 டாலர் என (112 ரூபாய்) நிர்ணயித்தால்கூட, தற்போது எண்ணை இறக்குமதிக்காக இந்தியாவில் செலவழிக்கப்படும் ரூ. 500 கோடி ரூபாய் 1800 கோடி ரூபாய் வரையிலும் உயரும்.

ஏற்கனெவே, 11ந் தேதி இரவு ஈரானின் டெஹ்ரான் நகரில் 12 லட்சம் டன் எண்ணையை ஏலம் விட்டதில் வழக்கமான விலையை விட (பேரல் 3.30 டாலர்) 6 மடங்குவரை உயர்ந்துள்ளது.

### காரணம் என்ன?

இவ் விலை உயர்வுக்குக் காரணம் என்ன?

அமெரிக்கா, ஜப்பான் நாடுகளைச் சேர்ந்த கம்பெனிகளின் கூட்டுக்குழு ஈரானின் எண்ணையை ஏலத்தில் ஒரு பேரல் எண்ணையை 16 டாலரிலிருந்து 17 டாலராக உயர்த்தியுள்ளன. இதனால் இந்தியா போன்ற வளர்ச்சியடையா நாடுகள் என்ன செய்வதென்று தெரியாமல் அதிர்ச்சியடைந்த நிலையில் உள்ளன.

## செக்-மே ஜெர்மனி ராஜீய உறவு

பிராக், டிச. 12—

செக்கோஸ்லேவியா வுக்கும், மேற்கு ஜெர்மனிக்குமிடையே ராஜீய உறவு இம்மாதம் 11-ந் தேதியிலிருந்து ஆரம்பமாகியுள்ளது.

இதற்கான ஒப்பந்தத்தில் மேற்குஜெர்மனியின் சான்சலர் வில்லி பிராண்டும், செக்கோஸ்லோவேதிய பிரதமர் லுபா மிர் ஸ்ராங்கலும் கையெழுத்திட்டுள்ளனர்.

## சென்னை டான்சி தொழிலாளர் உண்ணுவிரதப் போராட்டம்

சென்னை, டிச. 10—

தேவைக்கேற்ற குறைந்தபட்ச சம்பளம் போன்ற 17 அம்சக் கோரிக்கைகளை வலியுறுத்தி டான்சி தொழிலாளர் 3 நாள் உண்ணுவிரதப் போராட்டம் இங்கு இன்று தொடங்கியது.

முன்னாள் மேயர் எஸ்' கிருஷ்ண மூர்த்தி உண்ணுவிரதப் போராட்டத்தைத் தொடங்கி வைத்துப் பேசினர்.

தமிழகம் முழுவதும் நடைபெறும் மூன்று நாள் உண்ணுவிரதப் போராட்டத்தில் முதல் நாள் 300 பேரும் இரண்டாம் நாள்400 பேரும் மூனரும் நாள் 600 பேரும் கலந்துகொள்ளுகின்றனர்.

## இந்திரா காந்தியின் சிக்கன வழிகள்

புதுடில்லி, டிச. 13—

அரசு நிறுவனங்களிலும் வர்த்தக நிறுவனங்களிலும் வேலை நாட்களை வாரத்தில் 5 நாட்களாக குறைக்கவும் ஞாயிற்றுக் கிழமைகளில் தனியார் கார்களில் செல்வதை தடை செய்யவும் யோசித்து வருவதாக இந்தியப் பிரதமர் இந்திரா காந்தி கூறினர்.

பெட்ரோல், மண்எண்ணை நெருக்கடியைச் சமாளிக்கவே இந்த யோசனையாம்.

## ராஜபாளையத்தில் எல். ஐ. சி. ஊழியர் ஆர்ப்பாட்டம்

ராஜபாளையம், டிச. 10—

ராஜபாளையத்தில் சென்ற 7ம் தேதி எல்.ஐ.சி. ஊழியர்கள் 2 மணி நேர வெளி நடப்பும் ஆர்ப்பாட்டமும் நடத்தினர்கள்.

கோரிக்கை கோஷங்கள் முழக்கி ஊழியர்கள் ஆர்ப்பாட்டம் நடத்திய பின்னர் நடைபெற்ற கூட்டத்தில் சி.ஐ.டி.யூ. சார்பில் தோழர் மா. சேது ஆதரவு தெரிவித்துப் பேசினர்.

### தேவைப் பொருட்களை நியாய விலைகளில் தாரீர்!

# தமிழக ஜனநாயக மாதர் சங்க துவக்க மாநாட்டில்

## பெண்குலத்தின் முழக்கம்

திண்டுக்கல், டிச 13— டிசம்பர் 8, 9, தேதிகளில் திண்டுக்கல்லில் சுந்தரம் கல்யாண மஹாலில் தமிழக ஜனநாயக மாதர் சங்க துவக்கமாநாடு நடைபெற்றது. 150 பிரதிநிதிகள் மாநிலம் முழுவதிலிருந்து (மாதர் இயக்க முன்னணி ஊழியர்களாக இருப்பவர்கள்) கலந்து கொண்டனர்.

கே. பி. ஜானகியம்மாள் (மதுரை) மல்லிகா (நன்னிலம்) விஜயா ஜானகிராமன் (சென்னை) ஆகிய மூவர் தலைமைக் குழுவாக இருந்து மாநாட்டை நடத்தினர்

துவக்கத்தில் தியாகிகளுக்கு வீர வணக்கம் செலுத்தும் வகையில் 2 நிமிடம் மவுனமாக எழுந்து நின்று அஞ்சலி செலுத்தினர். மாநாட்டுப் பிரதிநிதிகளைவரவேற்று திண்டுக்கல் ஜனநாயக மாதர்சங்க செயலாளர் தோழர் லீலா உரையாற்றினர்.

தோழர் கே பி ஜானகியம்மாள் தலைமை உரையாற்றுகையில் மாதர் சங்க அமைப்பின் அவசியத்தை வலியுறுத்தினர்.

தோழர் பாப்பா உமாநாத் தமிழகத்தில் ஜனநாயக மாதர்சங்கவேலைகள்பற்றிய அறிக்கை சமர்ப்பித்தார். அதன் மீது 35 பிரதிநிதிகள் விவாதம் செய்தனர். அறிக்கை ஏகமனதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

### எம். ஆர். வி.

தோழர் எம்ஆர் வெங்கட்ராமன் (எம். பி.)இதய பூர்வமான வாழ்த்துரையைவழங்கிய போது—சமுதாயத்தில் பெண்களது இழி நிலையை எடுத்துரைத்து, தமிழகத்தில் ஜனநாயக மாதர் சங்கத்திற்கு சிறப்பான எதிர்காலம் உண்டு என்பதற்கு எடுத்துக் காட்டாக இம் மாநாடு விளங்குகிறது என குறிப்பிட்டு வாழ்த்தினர்.

சென்னை தோழர் மைதிலி சிவராமன் "சமூக மாற்றத்தில் பெண்கள் பாத்திரம்' என்பது குறித்து சிறப்புரை ஆற்றினர்.

தோழர் ஏ பாலசுப்பிரமணியம் வாழ்த்துரை வழங்கும்போது மனித குலம் தோன்றிய காலத்திலிருந்து இன்று வரை அது அடைந்து வந்த மாற்றங்களை எளிய முறையில் விளக்கி, அந்த மாற்றத்தையொட்டி சோஷலிச சமுதாயம் மலரும் என்றும் அதுதான் மக்களுக்கு வளமான வாழ்வுதரும் என்பதையும்விரிவாக கூறினர்.

தோழர் பாப்பா உமாநாத் அவர்களை கன்வீனராகக் கொண்டு 15 பேர்களைக் கொண்ட மாநில அமைப்புக்குழு அமைக்கப்பட்டது.

### தீர்மானம்

6 மாத காலத்திற்குள் தமிழகம் முழுமையும் எல்லா மாவட்டங்களிலும்பரவலாக மாதர் சங்க அமைப்பை உருவாக்குவது என்றும், 12 ஆயிரம் பேர்களை உறுப்பினர்களாக சேர்ப்பது என்றும் முடிவு செய்யப்பட்டது.

விலைவாசிகள் பயங்கரமாக உயர்ந்துள்ளதானது, குடும்பம் நடத்தும் பெண்களை மிகவும் பாதித்துள்ளதால் மாநிலம் முழுவதும் கிராமங்கள், நகரங்களில் 1000குடும்பத்திற்கு ஒரு கடை வீதம் நியாய விலைக் கடைகளை அரசு திறந்து, அரிசி,பருப்பு வகை, எண்ணெ வகைகள், குழந்தை உணவு, ரவா, மைதா ஜீனி, கோதுமை, துணி வகைகளை 71-ஆம் ஆண்டு விற்ற விலையில் விநியோகம் செய்யவேண்டுமென வற்புறுத்த 50 ஆயிரம் பெண்களிடம் கையெழுத்து வாங்கி ஜனவரி 12-ந் தேதி மாநிலம் முழுவதும் கலெக்டர், தாசில்தார், மற்ற அரசு அதிகாரிகளிடம் பெண்கள் ஊர்வலமாக சென்று சமர்ப்பிப்பது என்று முடிவு செய்யப்பட்டது.

### சட்ட திட்டம்

தமிழக ஜனநாயக மாதர் சங்க உறுப்பினர்களிடத்தில் 25 காசு ஆண்டு சந்தா வசூலிப்பது என்றும், மாதர் சங்க கொடி வெள்ளைத் துணியில் சுற்றி சிகப்பு பாடரில் பெண்ணின் உருவம் பொறித்து, "பெண் விடுதலை-சமத்துவம் - சோசலிசம்" என்ற வார்த்தைகள் பொறிக்கப்பட்டிருக்கும்.

12 வயதுக்கு மேற்பட்ட பெண்கள் அனைவரும் ஜனநாயக மாதர் சங்கத்தின் உறுப்பினராகச் சேரலாம்.

### குறிக்கோள்கள்

1. ஆணும், -பெண்ணும் சமத்துவம் என்ற அடிப்படையிலான வர்க்க சார்பற்ற சோசலிச சமுதாயத்தை உருவாக்கும் பணியில் ஈடுபடுவது

2. எல்லாவிதமான சுரண்டலுக்கும் காலனி ஆதிக்கத்துக்கும், ஏகாதிபத்தியத்திற்கும் முற்றுப் புள்ளி வைப்பது; உலகத்தில் சுதந்திரத்திற்காக பாடுபடும் மக்களுக்கு—குறிப்பாக அந்நாட்டு பெண்களுக்கு ஆதரவு தருவது.

3. நம்நாட்டை ஆண்டு வரும் முதலாளித்துவ ஆட்சியை மாற்றி தொழிலாளிகள், விவசாயிகள் மற்ற ஜனநாயக சக்திகளுடன் போராட்டத்தில் இணைந்து நின்று மக்கள் ஜனநாயக அரசை ஏற்படுத்த பாடுபடுவது; மற்றும் பெண்களின் சமஉரிமைகளுக்காகவும், வரதட்சிணைக்கொடுமை முழுமையாக ஒழிக்கப்பட வேண்டும் என்பதற்காகவும்,ஒருவனுக்கு ஒரு மனைவி தான்என்ற விதி, திருமணம், விவாகரத்து, சொத்துரிமை ஆகியவற்றில் பெண்களுக்குரிய சமஉரிமைக்காகவும் மற்றும் தீண்டாமை, சாதி வெறி, சமயவெறி மற்றும் சமூக மூடப் பழக்கவழக்கங்களிலிருந்து பெண்களை விடுவிக்கவும் தமிழ்நாடு ஜனநாயக மாதர் சங்கம் பாடுபடும்.

மேலும், பெண்களுடைய சமூக அறிவையும். கலாச்சாரத்தையும் வளர்ப்பதற்காக பல முற்போக்குக் கருத்துக்களை-குறிப்பாக விஞ்ஞான சோசலிசத்தை பெண்கள் அறிந்துகொள்ள தமிழ்நாடு ஜனநாயக மாதர் சங்கம் ஏற்பாடு செய்யும்.

### தீர்மானங்கள்

கிளைவ் ஹாஸ்டல், பாளையங்கோட்டைத்தீர்ப்பை அடிப்படையாகக்கொண்டு முதலமைச்சர் கருணாநிதி ராஜினமா செய்யவேண்டுமென்ற மாணவர்களது கோரிக்கையை இம்மாநாடு ஆதரிப்பதுடன், அடக்குமுறைப்பேயாட்சி நடத்தும் முதலமைச்சர் கருணாநிதி உடனடியாக ராஜினமா செய்யவேண்டும் எனத்தீர்மானித்தது.

தீண்டாமை என்ற கொடுமையை உடனடியாக ஒழிக்கவேண்டுமெனவும் அதற்காக மாதர் சங்கம் கிளர்ச்சி செய்வது என்றும்,

சினிமா, விளம்பரம் போன்றவை, பெண்களை இழிவு செய்யும் முறையில் ஆபாசமாக இருப்பதைக் கண்டிப்பதுடன்,

இளைய தலைமுறையினரின் ஒழுக்கத்தை, பண்பாட்டை குலைப்பதாக இருப்பதால்,இதனை உடனடியாக நிறுத்தாவிடில் மாதர் சங்கம் கிளர்ச்சி நடத்தும் என்றும்,

வியட்நாம் மக்களை வாழ்த்தியும், சிலி நாட்டில் ஏகாதிபத்திய சதியை கண்டித்தும், அலெண்டே பாப்லோ நெருடா மற்றும் உயிர்நீத்த தியாகிகளுக்கு வணக்கம் தெரிவித்தும்,

பஸ் கட்டண உயர்வை உடனே ரத்து செய்யக் கோரியும் மற்றும் 12 தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. மாநாட்டு முடிவுகளை தொகுத்துக்கூறி தோழர் பாப்பா உமாநாத் பேசியதும், 'மாநாடுவாழ்க!' என்ற முழக்கத்துடன்முடிவுற்றது.

### ஊர்வலம்

மாலை 6 மணியளவில் மாநாட்டு பந்தலிலிருந்து தோழர் திருமதிவீரபத்திரன் தலைமையில் ஊர்வலம் 4 ரத வீதிகள் வழியாக புறப்பட்டது.

### மாதர் ஊர்வல கோஷம்

ஆபாசசினிமாப்படங்களை—தடைசெய்! மாணவர்களை—சுட்டுத்தள்ளாதே! கருணாநிதியே — ராஜினமா செய்! மூடப் பழக்கங்கள்—ஒழிக! பெண் அடிமைத்தனம்—ஒழிக! சம வேலைக்கு சமகூலி—கொடு! விலைவாசி உயர்வை கட்டுப்படுத்து! மண்ணெண்ணை விலை உயர்வை—ரத்துசெய்! உத்தேச பஸ்கட்டணஉயர்வை—கைவிடு!ஜனநாயக மாதர் சங்கம்—வாழ்க!

என கோஷங்களிட்டுவந்தனர். ரோடுகளில் இருமருங்கிலும் ஏராளமாள ஆண்களும் பெண்களும் குழுவியிருந்து ஆதரவளித்தனர், ஜனநாயகமாதர்சங்கம் என எழுதப்பட்ட பேனரை இரு பெண்கள் கையில் பிடித்து கம்பீரமாக நடந்து வந்தார்கள், புதிய கோஷத்துடன்,பெண்கள் ஊர்வலமாக வருவதைப் பார்த்து உற்சாகத்துடன் பொது மக்கள் வரவேற்றார்கள்.

### பொதுக்கூட்டம்

ஊர்வலம், பாரதி திடலை இரவு 6-30 மணிக்கு வந்தடைந்தது. அங்கு நடைபெற்ற பொதுக்கூட்டத்திற்கு ஜனநாயக மாதர் சங்கத்தின் முன்னணி ஊழியரும் திண்டுக்கல் நகர கிளையின் தலைவரும் மாநில பொதுக்குழு உறுப்பினருமான தோழர் தனலெட்சுமி தலைமைவகித்தார்.

### ருக்மணியம்மாள்

சென்னை தோழர் ருக்மணியம்மாள் இரண்டுநாள் மாநாடு சிறப்பு பற்றியும், கொண்ட தீர்மானத்தை விளக்கியும் பேசினார். மண்ணெண்ணை, பெட்ரோல் விலை உயர்வு என்றைக்கும் இல்லாத அளவில் உயர்ந்து மண்ணெண்ணைசரிவர கிடைக்கவில்லை. கேடுகெட்ட ஆட்சியின் விளைவாக இவ்வாறு மண்ணெண்ணையுமகிடைக்காத வண்ணம் விலையும் கூடுதலாக உயர்ந்து உள்ளது. இதை அரசு கவனிக்க வேண்டாமா? எங்கு பார்த்தாலும் ஊழல் மலிந்து ஊரே சிரிக்குது. சென்னை கார்ப்பரேஷனில் மிகப் பெரிய ஊழல் நடந்திருக்கிறது. பத்திரிகை வாயிலாகசெய்திகள்வருகின்றன படித்து பார்த்து வருகிறோம் அதில் 50க்கு மேற்பட்ட வேலைகள் பிரிவு பிரிவாக இருக்கிறது. அதில் ஒன்று மின்சாரம். இதில் மட்டும் ஏறத்தாழ 8 கோடி ரூபாய்க்கு ஊழல் நடந்திருக்கிறது. எலக்ட்ரியில் பணி புரிவதாக பொய்யாக பேப்பர்களில் வேலையாள் பெயர்களை எழுதி சம்பளம் பட்டுவாடா செய்ததாக திருட்டுக் கையெழுத்தும்போட்டு சம்பளத்தையும் பெற்றுக் கொண்டார்கள். ஆனல் மின்சாரத்தில் 50 பேர் வேலை செய்யவில்லை. செய்யாமலே செய்ததாகச் சொல்லி பணத்தைக்கொள்ளையடித்துள்ளார்கள். இவைகளை அரசு கவனிக்க வேண்டாமா? கையாலாகாத அரசு இருந்துஎதற்கு? ரோசமிருந்தால் கருணாநிதி கீழே இறங்கியாக வேண்டாமா?-என்று பலத்த கைதட்டலுக்கிடையில் பேசி முடித்தார்,

### நெல்லிக்குப்பம் ஷாஜாதி

நெல்லிக்குப்பம் தோழர் ஷாஜாதி பேசியதாவது:—

மாதர்களுக்கு சங்கம் எதற்கு என்று கேட்கலாம். உழைக்கும் வர்க்கத்திற்கு எல்லாம் சங்கம்இருக்கிறது. வசதி படைத்த மாதர்களுக்கு'லேடிஸ்கிளப்'இருக்கிறது. அங்கே சுவீட் எப்படி செய்வதுகாரம எப்படிச் செய்வது, சேலைகளில் எப்படி பார்டர் இருக்க வேண்டும் ரவிக்கை எப்படி தைப்பது என்று ஆராய்ச்சி செய்து விட்டு கேரம், பூப்பந்து டென்னிஸ் விளையாடி பொழுதைக் கழிப்பார்கள். ஆனல் நாம் நமது சங்கத்தை அதற்காக ஆரம்பிக்கவில்லை. நமக்கு விலைவாசிகள் குறையவேண்டும். தேவைக்குத்தகுந்த ஊதியம் கிடைக்க வேண்டும். எல்லோரும்சரிநிகர்சமானமாக வாழ வழி வேண்டும். இவைகளை அடையத்தான் நாம் சங்கத்தை துவக்கியுள்ளோம். போராடிப்போராடித்தான் வெற்றி பெற முடியும் என்ற நிலை இன்றைக்கு இருப்பதால் - குழந்தை அழுது போராடித்தான் "பால் குடிக்குது" அது போல் நாமும் 'விலைவாசி உயர்வை கட்டுப்படுத்து' என்று போராட வேண்டும் என பேசி முடித்தார்.

### ஜானகி ராமச்சந்திரன்

திருச்சி தோழர் ஜானகி ராமச்சந்திரன் பேசியது:

சினிமா படங்கள், விளம்பர படங்கள். காலண்டர்கள் போன்ற அத்தனை விளம்பரங்களிலும் பெண்களை இழிவுபடுத்தும் முறையில் அரை நிர்வாணமாகவும், துணி இருந்தும் இல்லாததுபோல் அலங்கோலமாகவும் போட்டு, வாலிபர்களின்,இளம் மாணவர்களின் உள்ளங்களை பாழ்படுத்துகிறார்கள்.

பீடி விளம்பரம் செய்வதாக இருந்தாலும், கூட அதிலும் பெண்கள் படங்களைத்தான் போடுகிறார்கள்.

இந்த இழிவான நிலையைப் போக்க வேண்டாமா? சினிமா போஸ்டர்களை எடுத்துக் கொண்டால் அரை நிர்வாணமாகப் போட்டு, பெரிய போஸ்டர்களை ஒட்டுகிறார்கள்.பார்க்க கண் கூசுகிறது. கண்களை பொத்திக்கொண்டு ரோடுகளில் நடக்க வேண்டியுள்ளது.

சினிமாபடங்களின்வெளியீடுகள் எல்லாம் பார்த்தால். "ஏ" என்றுபோட்டு வயது வந்தவர்கள் மட்டும் பார்க்க வேண்டுமென கூறுகிறார்கள். ஆனல் அந்தப் படங்களுக்கு சிறுவர்கள்தான் அதிகமாகச் செல்கின்றனர்.

அந்தப் படங்களில் சேலையைக் கிழிப்பதும், ரவிக்கையைக் கிழிப்பதுமாகக் காட்டுகிறார்களாம். இவையெல்லாம் எதற்கு? ஆபாசத்தைத்தான் அதிகமாக வளர்க்கிறார்கள். அறிவு வளர்ச்சி எதையும் எடுத்துக்காட்ட வேண்டாமா?

நாட்டை ஆளுபவர்கள், இவைகளை அனுமதித்து வருவதைக் கண்டு பெண் குலம் தலைகுனிய வேண்டியுள்ளது.

எனவே, ஆபாச சினிமா படம், போஸ்டர், வியாபார முறையில் விளம்பரமாகும் படங்கள் முதலியவற்றை அரசு உடனடியாகத் தடை செய்ய வேண்டும். இல்லையேல் நாங்களே ஒன்று திரண்டு நடவடிக்கையில் இறங்க வேண்டி வரும் என எச்சரிக்கிறேன்!

சினிமாவில் வரும் பாடல்களை குழந்தைகள் விவரம் தெரியாமல் பாடுகிறார்கள். காதால் கேட்கமுடியவில்லை. குழந்தைகளை இதற்காக அடிப்பதா? தகுந்த நடவடிக்கை எடுக்க அரசை கேட்டுக்கொள்கிறேன்.

மற்றும் கோவை தோழர் பங்கஜம், நாகப்பட்டினம் தோழர் சுப்புலட்சுமி, மதுரை தோழர் சுப்புலட்சுமி, தோழர் கே. பி. ஜானகியம்மாள், தோழர் பாப்பா உமாநாத், தோழர் ஏ. பாலசுப்பிரமணியம் ஆகியோர் பேசினர்.

### பாப்பா உமாநாத்

மாணவர்கள் போராட்டத்தை ஆதரித்தும், கிளைவ் ஆஸ்டல் சம்பவம், நீதி விசாரணை நடந்து முடிந்த பின், கருணாநிதி அரசுதான் இவைகளுக்குக் காரணம். கருணாநிதி பதவியைவிட்டு கீழே இறங்க வேண்டும். மாணவர்களுக்கும், மாதர்களுக்கும் சம்பந்தமுள்ள விஷயம் இது. கஷ்டப் பாடுபட்டு பிள்ளைகளைப் படிக்க வைத்தால் கொலை வெறித் தாக்குதல்நடத்தி — திருச்சி பாளையங்கோட்டையில் லூர்துநாதன்—உயிர்களைப் பறித்து வருகிறது, கழக அரசு. பேராசிரியரையும் விடவில்லை. அவரையும் அடித்துள்ளார்கள். இவ்வளவு அடக்கு முறைகளையும் நடத்திவிட்டு, மாணவர்கள் கொதிப்படைந்து கண்டனம் தெரிவித்தும்கருணாநிதி ராஜினமா செய்யாமல்இருக்கிறார். உடனடியாக கருணாநிதி ராஜினமாசெய்யவேண்டும் எனபெற்றோர்களாகிய நாங்களும் அவர்கள் போராட்டத்தை ஆதரிக்கிறோம்.

### கே பி ஜானகியம்மாள்

1971ம்ஆண்டில்லாக்-அப்பில் பூட்டப்பட்ட ஜமீலா என்ற முஸ்லீம் பெண்ணை கற்பழித்துக் கொன்று விட்டார்கள். பல இடங்களில் பலாத்கார சம்பவம் நடந்து வருகிறது. ஜமீலாவை கற்பழித்து கொலை செய்த சம்பவத்தை சட்டசபையில் எடுத்துக் கூறினோம். திண்டுக்கல் ரெயில்வே ஸ்டேஷன்முன் 3 பெண்களைக் கற்பழித்து நிர்வாணமாக போலீசார் கொண்டு வந்து போட்டு விட்டு ஓடிவிட்டார்கள். அந்த சம்பவங்கள் திண்டுக்கல்நகரத்தில் இருப்பவர்களுக்கு நன்ருகத் தெரியும். இந்த மாதிரி ஈனச் செயல் வேறு நாடுகளில் நடக்காது, நடந்ததாக நாம் கேள்விப் படவில்லை. இந்த மாதிரி சமபவங்களை வேடிக்கை பார்த்து கொண்டிருக்கும் அரசுகளை இக்கூட்டம் மிக வன்மையாகக் கண்டிக்கிறது.

### தோழர் ஏ.பாலசுப்ரமணியம்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்மாநிலக்குழு

( 4-ம் பக்கம் பார்க்க )

# கன்னடத்தில் நடக்கும் கலாட்டாவுக்கு காரணம் என்ன?

## தாழ்த்தப்பட்ட வகுப்பினரை ஒடுக்க மேல்சாதி ஆதிக்க வர்க்கம் ஆட்டம்

கர்னடக மாநிலம் முழுவதும்வகுப்புக் கலவர சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. ஒரு பக்கம் மேல் சாதிக்காரர்களும், மறுபக்கம் தாழ்த்தப்பட்ட மக்களும் மோதிக் கொள்ளும் நிலைமை பயங்கரமாக உருவாகியுள்ளது. இந்த இரு பகை முகாம்களுக்கும் மாணவர்கள் முன் நிற்பது, கொந்தளிப்பையும் மோதல்களையும் தீவிரமாக்கி விட்டன.

இந்த அளவுக்கு அங்கே நிலைமை முற்றியதற்குக் காரணம் என்ன?

இருபது மாதங்களுக்கு முன்புதான் தேவராஜ் அர்ஸ் என்பவரின் தலைமையில் இந்திராகாங்கிரஸ் மந்திரிசபை கர்னடகத்தில் அமைந்தது.

இந்த இருபது மாத காலத்திலும், ஏனைய மாநிலங்களைப் போன்றே இங்கும் விலைவாசி ஏற்றமும், வேலையில்லாத் திண்டாட்டமும் தீவிரமாகி விட்டதுடன், கடும் வறட்சியும் ஏற்பட்டு, மக்களெல்லாம் அழுது புலம்பும் அளவுக்கு வறுமை வாட்டியது

வாழ்வுக்காக தொழிலாளர்கள் நடத்திய போராட்டங்களுக்கும், ஜனநாயக உரிமைகளுக்காக மாணவர்கள் நடத்திய கிளர்ச்சிகளுக்கும், இந்த அர்ஸ் அரசு, துப்பாக்கியாலும் குண்டாந்தடியாலும் தான் பதில் அளித்து வந்தது.

கர்நாடக மாநிலத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் கணிசமாக இருக்கிறார்கள்.பொருளாதார நெருக்கடியின் தாக்குதல்களுக்கு இவர்கள்தான் ஏனைய ஏழை மக்களைவிட அதிகமாக ஆளாகிறார்கள்.

வறுமைக்கடி பொறுக்க முடியாமல் இந்த மக்கள் கொந்தளித்தெழுந்து உரிமைகளைக் கோருகின்றபோது, மேல்சாதியிலுள்ள ஆதிக்க வர்க்கத்தினர் ஆத்திரம் அடைந்தார்கள். இது கர்நாடக மாநிலத்தில் மட்டுமின்றி இந்தியா முழுவதுமே இன்று நிலவும் நிலைமை இதுதான்.

### பசவலிங்கப்பா விவகாரம்

இப்படிப்பட்ட சமயத்தில்தான்-அர்ஸ் மந்திரி சபையில் உள்ள உள்ளாட்சித் துறை அமைச்சர் பசவலிங்கப்பா—மேல் சாதிக்காரர்களின் ஆணவப்போக்கையும் கர்நாடக இலக்கியங்களில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு எதிராகவுள்ள வாசகங்களையும் குறை கூறியும் கண்டித்தும் பொதுமேடைகளிலே பேசி வந்தார்.

சாதிக் கொடுமைக்கு அடிப்படையான காரணம், சுரண்டல் சமுதாய அமைப்புதான் என்பதையும், சாதி இழிவுகளை எதிர்க்க, சுரண்டப்பட்ட சகலசாதி மக்களையும் ஒன்று திரட்டி வாழ்க்கை உயர்வுக்கான வர்க்கப் போராட்டங்களை நடத்தி—ஆதிக்க வர்க்கங்களையும் அவர்களது நலன்களைக்காக்கும் பழைய பழக்க வழக்கங்களையும், பழைய இலக்கியங்களில் காணப்படும் காலத்துக்கு ஒவ்வாத கருத்துக்களையும் எதிர்க்க வேண்டும் என்பதையறியாமல்—நேரடி தாக்குதலில் ஈடுபட்டவர் பசவலிங்கப்பா.

பசவலிங்கப்பாவின் சாதி எதிர்ப்புப் பேச்சுகளைப் பயன்படுத்திக்கொண்டு—மேல்சாதியிலுள்ள ஆதிக்க வர்க்கங்களும் அர்ஸ் மந்திரி சபையிலேயேயுள்ள மிகப் பெரும்பாலான மந்திரிகளும் பசவலிங்கப்பா மீது பகைமைத் தீயை விசிறி விட்டார்கள்.

கன்னட மொழியையும், கன்னட இலக்கியங்களையும் அவர் தரக்குறைவாக பேசுவதாகக் கதை கட்டி விட்டார்கள். ஆதிக்க வர்க்கங்களின் பத்திரிகைகளும் நெருப்புக் கக்கின.

இந்தப் பகைப் பிரச்சார வலையில் மேல்சாதி மாணவர்கள் சிக்கிக் கொண்டார்கள்.'பசவலிங்கப்பாவை மந்திரிசபையிலிருந்து நீக்கு'என்று கோஷம் எழுப்பினர்கள். ஆர்ப்பாட்டங்களில் ஈடுபட்டு, அரசாங்கச் சொத்துக்களுக்கு சேதம் விளைத்தார்கள்.

இதனல், ஆத்திரமுற்ற தாழ்த்தப்பட்ட மாணவர்கள், எதிர் ஆர்ப்பாட்டங்களில் இறங்கியுள்ளார்கள்.

இவ்வாறு கர்நாடகத்தின் நிலைமை நாசகரமான வகுப்புக் கலவர சூழ்நிலையாக வளர்ந்து உள்ளது.

இந்த நிலைமையில்தான், அர்ஸ் மந்திரி சபையில் உள்ள எல்லா மந்திரிகளும் பசவலிங்கப்பா மந்திரியாக உள்ள மந்திரி சபையில் இருக்க மாட்டோம் என்று ராஜினமா செய்து விட்டார்கள்.

சிக்கலில் மாட்டிக் கொண்ட தேவராஜ் அர்ஸ், டில்லிக்கு ஓடினர்; காங்கிரஸ் தலைவர் சங்கர் தயாள் சர்மாவைப் பார்த்தார்;பிரதமர் இந்திரா காந்தியைப் பார்த்தார் பசவலிங்கப்பாவைவிலக்காவிட்டால் மந்திரி சபையும் இருக்காது, அமைதியும் இருக்காது என்று கூறினர்.

பசவலிங்கப்பாவும் டில்லிக்குச் சென்றார். காங்கிரஸ் தலைவரையும்பிரதமரையும் பார்த்ததுடன், தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த மந்திரி ஜகஜீவன்ராமையும் ஒன்றுக்குப் பத்துத் தடவை பார்த்தார். ஜகஜீவன்ராமிடம். "மேல்சாதிக்கார மந்திரிகளும் ஆதிக்க வர்க்கங்களும் என்னை மந்திரிப் பதவியிலிருந்து விலக்கிவிட முனைந்திருக்கிறார்கள்"—என்று புகார் கூறி, எப்படியாவது தன்னை நீக்கி விடாதபடிச் செய்ய வேண்டுமென்றும் வேண்டினர் ஒன்றும் பலிக்கவில்லை.

தேவராஜ் அர்ஸின் புதிய மந்திரிசபை பட்டியலை கவர்னரிடம் கொடுக்கப் போகிறது. அதில் பசவலிங்கப்பாவின் பெயர் இருக்காது. அவரை ஆதரிக்கும் ஒன்றிரண்டு மந்திரிகளின் பெயர்களும் இருக்காது.

### ரங்கநாத் விவகாரம்

இந்த நிலையில் தாழ்த்தப்பட்ட வகுப்பைச்சேர்ந்த கேளச் ரங்கநாத் என்பவரை மந்திரி சபைக்குள் இழுத்துப் போட தேவராஜ்அர்ஸ் முயற்சிக்கிறார்,

ரங்கநாத் சும்மா இல்லை. அவர் கர்நாடக மாநில காங்கிரஸ் கமிட்டித் தலைவராக இருக்கிறார். கட்சி ஸ்தாபனத்தின் தலைவராக தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஒருவர் இருப்பாரேயானல் சட்டமன்ற, நகர் மன்றங்களுக்குத் தேர்தல் வருகின்ற காலங்களில், தன் சாதியைச் சேர்ந்தவர்களையே அதிக எண்ணிக்கையில் காங்கிரஸ் வேட்பாளர்களாகநிறுத்தி வைப்பார் என்று கருதி—எனவே அந்த மாநில காங்கிரஸ் தலைமைப் பதவியினின்றும் ரங்கநாத்தை எடுத்து விட்டு, அவரை மந்திரி சபைக்குள் மாட்டி விட்டால், மேலாதிக்கக்காரர்களைப் பெருவாரியாகக் கொண்ட மந்திரி சபையின் குகைக்குள்ளேயே பூட்டிவிடலாமென்றும் தேவராஜ் அரஸும் இதரர்களும் கருதுகிறார்கள்.

ஆனல், கட்சி ஸ்தாபனத் தலைமைப் பதவியை விட்டு விட்டு—மந்திரி சபைக் கூட்டுக்குள் புக ரங்கநாத் விரும்பவில்லை. டில்லி மேலிடமும் ரங்கநாத்தை கட்சி ஸ்தாபனத்திலிருந்து கழற்றிவிட பல வழிகளிலும் முயற்சித்து வருகிறது.

மந்திரி சபையில் சேருவதற்கு ரங்கநாத் பிடிவாதமாக மறுத்துவிட்டால்-அவர் மந்திரியாகக்கூடத் தேவையில்லை. ஆனல் கட்சி ஸ்தாபனத் தலைமையில் மட்டும் அவரை இருக்க விடக்கூடாது என்பதில் மேலிடமும் அர்ஸ் போன்ற மாநிலத் தலைவர்களும் உறுதியாக இருக்கிறார்கள்.

இவ்வாறு தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்த்த பசவலிங்கப்பாவை மந்திரிப்பதவியிலிருந்து விரட்டவும்—ரங்கநாத்தை மாநில காங்கிரஸ் தலைமைப் பதவியிலிருந்து விரட்டவும்—மேல் சாதித் தலைவர்களும் ஆதிக்கக் கூட்டங்களும் கலவரங்களுக்கு தூபம் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

அரசின் கொள்கைகளாலும் ஆதிக்க வர்க்கங்களின் சுரண்டலினலும் வறுமை வாய்ப்பட்ட தாழ்த்தப்பட்ட மக்கள் வாழ்க்கை உயர்வுப் போராட்டத்தில் இறங்கும்போது, அவர்களை தீண்டாமை ஆயுதத்தைத் கொண்டு அடக்கி, ஒடுக்க ஆதிக்க வர்க்கங்கள் முயல்கின்கிறன.

அதன் பிரதி பலிப்பைத்தான், இன்று கன்னட மாநிலத்தில் பார்க்கிறோம்.

—நமது விசேஷ நிருபர்.

## தமிழக..

3(-ம் பக்கத் தொடர்ச்சி)

செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமண்யம் பேசியதாவது:—

முதலமைச்சர் கருணாநிதி பொய்யையே முதலாகக் கொண்டு ஆட்சி நடத்தி வருகிறார். குட்முருட்டி குண்டு, சிதம்பரத்தில் மாணவர் உதயகுமார் இறக்கவில்லை என பொய், திருச்சி கிளைவ் ஹாஸ்டல் அடக்குமுறை, பாளையங்கோட்டை சம்பவம் போன்ற விஷயங்களில் பொய்யே கூறி வந்துள்ளார்.

கடைசியாக சட்டமன்றத்திலும் ஒரு பொய்யைக் கூறினார் கருணாநிதி. தி,மு.க, விலிருந்து விலகி அ.தி.மு.க. வில் சேர்ந்த சட்டமன்ற உறுப்பினர் சவுந்தர பாண்டியன், ஒரு வேலைமுடித்துக் கொடுப்பதற்காக கார் நிதி தர வேண்டும் என்றுகேட்டு ஒருவருக்கு கடிதம் எழுதியதாக, ஒரு கடிதத்தை சட்ட மன்றத்தில் படித்துக்காட்டினார் கருணாநிதி. சட்ட சபையில் ஏக ரகளை நடந்தது. ஆனால் அந்த கடிதம் பொய்யானது என்பது2நாட்களில் அம்பலமாகிவிட்டது. அது பொய்க் கடிதம் என்பதைக் கருணாநிதியே ஒப்புக் கொள்ள வேண்டியிருந்தது. சபாநாயகரும், அக் கடிதம பொய்யானதுதான் என்று தீர்ப்புக் கூறினார்.

இவ்வாறு முதலமைச்சர் கருணாநிதி பொய் ஒன்றையே துணையாகக் கொண்டு ஆட்சியில்ஒட்டிக் கொண்டிருக்கப்பார்க்கிறார்.

இண்டியும் — சிண்டியும் ஒன்றுதான் என்று முன்னமே நாங்கள் கூறியுள்ளோம். இப்போது பெருந்தலைவர் காமராஜ் இண்டிகேட் காங்கிரசில் சேர ஒப்பந்தம் செய்துள்ளார்.போக போக ஒரே காங்கிரசாக ஆகிவிடும். வலதுகள் ஊருக்கொரு கொள்கையாக கடைப்பிடித்து வருகிறார்கள். இந்திரா காங்கிரசுடன் இணைந்து இருக்கவே வலதுகள் விரும்புகின்றனர். கருணாநிதி இடையில் ஒரு பிரச்சாரம் செய்கிறார் பத்திரிகைகளில் செய்தியை வெளியிட்டுள்ளார். 'இடது கம்யூனிஸ்ட் கட்சி கொள்கைக்கும் எங்களது தி.மு,க. கொள்கைக்கும் அதிக வேறுபாடு ஒன்றும் இல்லை. ஆகவே கூட்டுச் சேர்வதில் பெரிய தடை ஒன்றும் இல்லை' என்று கூறியிருக்கிறார். நான் உடனே மறுப்பு அறிக்கைவிட்டேன். மக்களை ஏமாற்ற கருணாநிதி இவ்வாறு செய்து வருகிறார் என்று. மற்றும்மத்திய அரசு நிலைபற்றி பேசி, ஜனநாயக மாதர் சங்கம் வளரவாழ்த்தி தனது உரையை முடித்தார்.

கடைசியாக திண்டுக்கல் ஜனநாயக மாதர்சங்க செயலாளர் தோழர் லீலா நன்றி கூற கூட்டம் முடிந்தது.

—ந. நி.

## "மாபியா"...

(1-ம் பக்கத்தொடர்ச்சி)

டுள்ளன்,

இத்தகைய இழிசெயலில் ஈடுபட்டுள்ள இந்த "மாபியா"ஸ்தாபனம் சிசிலியில் தோற்றுவிக்கப்பட்டது. இதன் உறுப்பினர்கள் சிசிலியில் உள்ள கொள்ளைக்காரர்களிடமிருந்து பொறுக்கி எடுக்கப்பட்டு பயிற்சிக்கப்பட்டவர்களாவர்.

'மாபியா'வின் உறுப்பினர்கள் அமெரிக்காவுக்கு சென்று, சில வருடங்களில் அங்நாட்டின் உயர் மட்டங்களில் விரிவானதொடர்புகள் கொண்டனர். இந்த 'மபியா' ஸ்தாபனத்தின் நடவடிக்கைகளைத் தடுக்க, அமெரிக்க அரசாங்கத்தால் முடியவில்லை.

இந்த ஸ்தாபனம் பல் வேறு நாடுகளில் செயல்பட்டு வந்தாலும். இந்தியாவில ஆறு மாதங்களுக்கு முன்பிருந்து தான் இதன் நடவடிக்கை இருந்து வருவதாகத் தெரிய வருகிறது.

நிதி அமைச்சரவையில் உள்ள மேல்மட்ட அதிகாரிகள், "மாபியா" ஸ்தாபனம் இந்தியாவின் மீது இப்போது அக்கறை கொண்டுள்ளது என்று சந்தேகப்படுகிறார்கள். வியட்நாம் யுத்தத்தின் போது, கஞ்சா, அபின் போன்ற போதைப்பொருள்களை கடத்துவதற்கு, மிகவும் வசதியாக இருந்தது. இப்போது, வியட்நாமிலிருந்து, அமெரிக்கா வெளியேற இருப்பதால் "மாபியா"ஸ்தாபனம் வேறு நாடுகளைத் தேடவேண்டியதிருக்கிறது. மருந்து உபயோகத்திற்காக இந்தப் போதைப் பொருள்களை இந்தியா பயிரிட்டு ஏற்றுமதி செய்கிறது, கிட்டத்தட்ட. இதன் உலக ஏற்றுமதியில் 85 சத விகிதம் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகிறது.

சமீபத்தில் கிடைத்த தகவலின்படி, இந்த "மாபியா" ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஒருவர், இந்தியாவிற்கு வந்திருந்தார்.மிகப்பெரியவிடுதி ஒன்றில் தங்கி, இந்தியாவில் அவர்களுடைய கூட்டாளி ஒருவரைச் சந்தித்திருக்கிறார். அவர் தங்கியிருக்கும் போது, மிக ஆடம்பரமாகச் செலவு செய்திருப்பதாகவும் தெரிய வருகிறது. இதில் மிகவும் கவலைக்கிடமானது என்னவென்றால்ஏற்கனவே இவர்கள் தங்களது நடவடிக்கையை ஆரம்பித்து விட்டார்களோ என்று சந்தேகப்படுவதுதான். அவர்கள் கஞ்சா, அபின் போன்ற வைகளைச் சுத்திகரிக்கும் ஆராய்ச்சிக் கூடங்களை ஆரம்பித்து விட்டார்கள் என்று தெரிய வருகிறது.

### கடுமையான நடவடிக்கை வேண்டும்

நிதி அமைச்சகத்தார் இது பற்றி உறுதியாக சொல்லவில்லை. இந்தியாவிற்கு — இந்தப் போதைப் பொருள்களை ஏற்றுமதி செய்வதின் மூலமாக கிட்டத்திட்ட 13 கோடி ரூபாய் கிடைக்கிறது. இந்தியாவில் இந்தப் பொருள்களை பயிரிட செய்வதும். அதனை ஏற்றுமதி, செய்வதும் சரியான முறையில் கண்காணிக்கப் படுகிறதா, என்பது சந்தேகமே. "மாபியா;' ஸ்தாபனம் இந்தியாவில் காலூன்ருமல் தடுக்க அரசு கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும். 'மாபியா' ஸ்தாபனத்தின் பண வசதியும், செல்வாக்கும், அவர்களது கொடூரமான நடவடிக்கைகளும், அரசுக்கு ஒரு சவாலாக இருக்கும். இதனை முறியடித்தே தீரவேண்டும். அதற்கான முயற்சியில், அரசாங்கம் தயங்காமல் இறங்க வேண்டும்.

சர்க்கரை ஆலை தொழிலாளருக்கு கொடுத்த வாக்குறுதியை மீறி

# முதலாளிகள் கோரும் முறையில் கமிட்டி அமைப்பது ஏன்?

## மத்திய தொழிலாளர் அமைச்சருக்கு உமாநாத் கடிதம்

**திருச்சி, டிச 12—**

**சர்க்கரை ஆலை முதலாளிகளுக்குத் தனிச் சலுகை காட்டி தொழிலாளர்களின் ஊதிய உயர்வுக் கோரிக்கைகளை நிராகரிக்கவும், இந்த நோக்கத்தில் அரசாங்கம் கொடுத்திருந்த வாக்குறுதியிலிருந்து மீறி முதலாளிகள் கோரியபடி ஒரு கமிட்டி அமைக்கவும் அரசாங்கம் முனைந்துள்ளது.**

**அரசாங்கத்தின் இந்தப் போக்கைக் கண்டித்து தொழிலாளர் நலஅமைச்சர் ரகுநாத ரெட்டிக்கு சி ஐ டி யூ சார்பில் தோழர் ஆர் உமாநாத் எழுதியுள்ள கடிதத்தைக் கீழே பிரசுரித்திருக்கிறோம்.**

அன்புள்ள திரு ரகுநாத ரெட்டி,

27—11—73-ம்,தேதியன்று நீங்கள் கூட்டிய சர்க்கரை முத்தரப்புக் கூட்டத்தில் நீங்கள் நிகழ்த்திய பேச்சிலிருந்து உருக்கு, மின்சாரம், சிமெண்ட், நிலக்கரி சுரங்கள் முதலினவற்றிற்கு அமைக்கப்பட்ட மாதிரியில் சர்க்கரைத் தொழிலுக்கும் இருதரப்புப் பேச்சுவார்த்தைக்கமிட்டியை அரசாங்சம் அமைக்கும் என்ற அபிபிராயம் தொழிற்சங்கப் பிரதிநிதிகளுக்கு ஏற்பட்டது. அரசாங்கத்தின் கருத்தைப் போன்றே தொழிலாளர் துறை துணை அமைச்சரான பாலகோவிந்தவர்மாவும் வலியுறுத்திப் பேசினர்.

இருதரப்புக் கமிட்டி அமைக்கப்படுவதை முதலாளிகள் எதிர்த்தனர். கமிட்டிக்கு "சுயேச்சையான" தலைவரை நியமிக்க வேண்டும் என்று கோரினர்.

ஒரு தலைவருடன் கூடிய கமிட்டி அமைக்க வேண்டும் என்ற முதலாளிகளின் கோரிக்கையை ஐ என் டி யூ சி ஒன்றைத் தவிர மற்றெல்லா தொழிற்சங்கமையங்களும் — சி ஐ டி யூ ஏ ஐ டி யூ சி, எச் எம் எஸ், உ பி யின் ஐக்கிய சீனிமஸ்தூர் சபா —ஆகியவை எதிர்த்தன.

இருதரப்புக் கமிட்டி அமைக்க வேண்டும் என்ற அரசாங்கத்தின் வாக்குறுதியை உறுதியாக நிறைவேற்ற வேண்டும் என்று கோரினர். ஐ என் டி யூ சி பிரதிநிதிகள் முதலாளிகளின் விருப்பங்களையே முழுமையாக எதிரொலித்தனர்.

அனேகமாக தொழிற்சங்கப் பிரதிநிதிகளின் ஒருமுகமான கருத்து இருந்த போதிலும் அரசாங்கமே அறிவித்த நிலைக்கும் சிமெண்ட், உருக்கு, மின்சாரம், நிலக்கரி போன்ற தொழில்களுக்கு அமைக்கப்பட்டிருக்கும் ஏற்பாட்டுக்கு மாருக அரசாங்கம் விலகிச் சென்று முதலாளிகள் கோரியபடி ஒரு தலைபட்சமாக தலைவருடன் கூடிய ஒரு கமிட்டியை அமைத்தால் அது சர்க்கரை ஆலை முதலாளிகளுக்கு விசேஷ சலுகை காட்டும் நடவடிக்கையாகவே கருதப்படும்—அரசாங்கம் கருதும் காரணங்களுக்காக முதலாளிகளிலும் கூட தனிச்சலுகை பெற்ற தனிக் கூட்டமாகக் கருதப்படும்.

இத்தகைய நடவடிக்கை எதிலும் செல்ல வேண்டாம் என்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறேன். தொழிலாளர் நல அமைச்சக அதிகாரி ஒருவர் கூட்டும் இருதரப்புக் கமிட்டி உடனடியாக அமைக்கப்பட வேண்டும் என்று கோருகிறேன்.

நன்றி

உண்மையுள்ள,

ஆர். உமாநாத்.

## கோரிக்கைகளை வற்புறுத்தி வட்ட மாநாடுகள்

### ஆசிரியர் கூட்டணி பொதுக்குழு முடிவு

திருச்சி, டிச. 13—

வருகிற ஜனவரி 10ந்தேதி முதல் ஏப். 10ந் தேதிவரையிலான மூன்றுமாதங்களில், ஆசிரியர் கூட்டணி வட்ட மாநாடுகள் நடத்துவது என்றும், அதில் கோரிக்கைகளைவற்புறுத்துவது என்றும் ஆசிரியர் கூட்டணியின் மாநிலப் பொதுக்குழு முடிவு செய்துள்ளது.

கடந்த 8, 9 தேதிகளில் இங்குள்ள சிந்தாமணி சின்னையாபிள்ளை சந்தில் நடந்த மாநிலப் பொதுக் குழுக்கூட்டத்தில் இம்முடிவு அனைத்துப் பள்ளிகளையும் அரசே ஏற்று நடத்துதல்—10 ஆண்டு ஊதிய அடிப்படையில் தேக்க ஊதியத்துடன்கூடிய தேர்வுநிலை வழங்குதல், இளநிலை ஆசிரியர் ஊதியம் ரூ. 150 என்பதை உடன் மாற்றி அமைத்தல் — பொது ஊழியப் பட்டியலை நடைமுறைக்குக் கொண்டுவருதல், வீட்டு வாடகைப்படி, மருத்துவப்படி, நகர ஈட்டுப்படி, கிராம ஈட்டுப்படி, முதலியன வழங்குதல், ஆசிரியர்களின் குழந்தைகட்கு கல்லூரிவரை இலவசக்கல்வி — முதலிய 9 கோரிக்கைகள் இம்மாநாட்டில் வற்புறுத்தப்படும்.

இம்மாநாடுகளில் கோரிக்கைகளுக்கான அடுத்த கட்ட இயக்கத்துக்கு ஆசிரியர்களை ஆயத்தப் படுத்துவது எனவும். முடிவுசெய்யப் பட்டது.

மேலும், தேவைக் கேற்ப குறைந்த பட்ச ஊதியம், தொழிற்சங்கஉரிமை,சட்டமேலவைக்கு வாக்களிக்கும் உரிமை, போனஸ் முதலிய கோரிக்கைகளுக்காக—மதுரையில் நடந்த மாநில மாநாட்டு அடிப்படையிலும் கரக்பூரில் (மே. வங்கம்) நடந்த அகில இந்திய கருத்தரங்கின் அடிப்படையிலும் —தமிழகத்தில் அகில இந்திய தொடக்கப்பள்ளி ஆசிரியர் கருத்தரங்கினை நடத்துவது என்வும் தீர்மானிக்கப் பட்டது.

## இஸ்ரேலுக்கு அமெரிக்க ராணுவ உதவி

வாஷிங்கடன், டிச 13—

இஸ்ரேலுக்கு 220 கோடி டாலர் அவசரகால ராணுவ உதவி அளிக்க வகை செய்யும் மசோதா அமெரிக்க நாட்டின் பிரதிநிதிகள் சபையில் (கீழ் சபை)யில் நிறைவேறியது.

மேற்கு ஆசியப் பகுதியில் ராணுவ பலா பல நிலையைப் பராமரிக்க இஸ்ரேலுக்கு இந்த ராணுவ உத்வி அளிக்க வேண்டும் என்று நிக்சன் ஆட்சி வற்புறுத்தி இம்மசோதவை நிறைவேற்றியுள்ளது.

# சோவியத் நாட்டுக்கு கடன் தர அமெரிக்கா நிபந்தனை

வாஷிங்டன், டிச 12—

சோவியத் யூனியனுக்கு வர்த்தகக் கடன்கள் கொடுப்பதற்கு அமெரிக்க பிரதிநிதிகள் சபை நிபந்தனை விதித்துள்ளது.

சோவியத் யூனியனிலிருந்து எல்லா யூதர்களும் மற்ல மைனரிடி மக்களும் வெளியேற்றுவதற்கு எதிராகப் போடப்பட்டிருக்கும் தடைகளை எல்லாம் அகற்றினல் தான் கடன் கொடுக்க முடியும் என்று சோவியத் யூனியன் போன்ற ஒரு பெரும் வல்லரசு நாட்டுக்கே அமெரிக்க அரசு நிபந்தனை விதிக்க முற்படுமானல் வளர்ச்சியடையாத நாடுகள் மீதெல்லாம் எத்தகைய அரசியல் தளைகளை அது விதிக்கும் என்பதை யூகிக்க முடியுமல்லவா?

# கை நெசவுத் தொழிலாளர்கள் கூலிஉயர்வு போராட்டம்

நாகர்கோவில் டிச 13—

நாகர்கோவில் கைநெசவு தொழிலாளர்கள் 3000 பேர் 50 சதவீத கூலி உயர்வு, எண்ணெய்—மெழுகு நிர்வாகம் வழங்க வேண்டும். முழுநேர வேலைக்கு உத்திரவாதம், சட்டப் பாதுகாப்பு போன்ற கோரிக்கைகளை முன் வைத்ததினல்,

பெரிய டர்க்கி நெசவு ஆலை முதலாளிகள் 30—11—73 முதல் ஆலைகளை திடீர் கதவடைப்புச் செய்துள்ளனர்.

இதனல், 3000 நெசவுத் தொழிலாளர்களும் சுமார் 4000 உபதொழில் செய்பவர்களும் பட்டினிக்கு ஆளாக்கப்பட்டுள்ளனர்.

சர்வகட்சி போராட்டக் குழுஅமைத்துபோராடமுன் நிற்கும் போராட்டக்குழுவுடன் வரமறுத்து திமுக சங்கம் அதன் 35 உறுப்பினர்களுடன் மறியல்செய்து 29—12—73-ல் சிறை சென்றனர்.

கன்னியாகுமரி மாவட்ட ஜெனரல் ஓர்க்கர்ஸ் யூனியன் சிஐடியூ சங்கம் கோரிக்கைகளை முன் வைத்து சர்வ கட்சி போராட்டக்குழு அமைத்து அதன் மூலம் போராட்டம் நடத்திவருகிறது.

லேபர் ஆபீசர் முன் பேச்சுவார்த்தை நடத்த கலைக்டர் ஏற்பாடு செய்தும் ஆலை முதலாளிகள் பேச்சுக்கு வரமறுத்து வருகின்றனர்.

இன்று 14 வது நாளாக சட்ட விரோத கதவடைப்பு நீடிக்கிறது.

2—12—73 ஞாயிறு அன்று ஏற்பாடு செய்யப்பட்ட பேச்சுவார்தையில் முதலாளிகள் சங்க செயலாளர் கலந்து கொண்டு 3—12—73-ல் கதவடைப்பு ரத்து செய்து வேலைகொடுக்கவும், மீண்டும் 7-ந் தேதி சந்தித்து பேசி கோரிக்கைகள் குறித்துமுடிவுகாணவும் ஒப்புக்கொண்டு சென்றார்.

ஆனல் ஒப்பு கொண்டபடி கதவடைப்பை ரத்து செய்யவில்லை. அதற்கு பின்னர் பேச்சு வார்த்தைக்கும் வராதுஏமாற்றிவருகிறார்கள்

11—12—73-ல் ஆட்சித் தலைவரை சந்தித்து நெசவு தொழிலாளர்களுக்கு நிவாரணம் வழங்குமாறு சர்வ கட்சி பிரதிநிதிகள் கேட்டனர்.

10—12—78 முதல் ஆட்சி தலைவர் அலுவலகம் முன், தினம் 5 தொழிலாளர்கள் வீதம் சத்யாக்கிரகமும் நடத்தி வருகின்றனர்.

## கோரிக்கைகளை வலியுறுத்தி மாணவர்கள் ஸ்டிரைக்

சத்தியமங்கலம், டிச.13—

சத்தியிலுள்ள ஆண்கள் உயர்நிலைப் பள்ளி மாணவர்களும், பெண்கள் உயர்நிலைம் பள்ளி மாணவிகளும் தங்களுடைய கோரிக்கைகளை வலியுறுத்தி பள்ளிகளுக்கு செல்லாமல் ஸ்டிரைக் செய்தனர்.

திருச்சி கிளைவ் விடுதியிலும், பாளையங்கோட்டை பள்ளியிலும் போலீசார் மிருகத்தனமாக நடந்து கொண்டதை கண்டித்து வளியான நீதிபதிகளின் தீர்ப்பையொட்டி இதற்கு காரணமான காவல்துறைக்கு பொறுபபாயிருக்கும் முதலமைச்சர் பதவி விலகவேண்டும் என்றும்அதுவரை மாணவர்கள் பள்ளிக்குச் செல்வதில்லை என்றும் தமிழகம் முழுவதும் மாணவர் போராட்டம்நடைபெற்று வருவதையொட்டி இங்குள்ள அரசினர் ஆண்கள் உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியரிடம் பள்ளியின் மாணவர்கள் க. வெ. இராசகோபால், ரங்கசாமி, அகம்மது பாட்சா, இரத்தினசாமி ஆகியோர் மனுக் கொடுத்துவிட்டுப் பள்ளியை விட்டுவெளியேறினர்.

கோரிக்கைகள் நிறைவேறும்வரை பள்ளிக்குச் செல்வதில்லை என்று மாணவர்கள் கூட்டத்தில் முடிவு எடுக்கப்பட்டது.

மகாராஷ்டிர 'பந்த்'துக்கு

# அனைத்து மத்திய தர ஊழியர்களும் தயாராகின்றனர்

பம்பாய், டிச. 13—

அத்தியாவசிப் பொருட்கள், பெட்ரோல். மண்ணெண்ணை ஆகியவற்றின் விலைவாசி உயர்வை எதிர்த்தும் ஏனைய ஜனநாயக கோரிக்கைகளுக்காகவும் வருகிற ஜனவரி 2-ல் மகாராஷ்டிர பந்த் நடத்தஇடதுசாரி தொழிற்சங்கங்கள் தீவிர ஏற்பாடுகள் செய்து வருகின்றன.

### தொழிலாளர்கள் தயார்

பந்தை வெற்றிகரமாக நடத்த தொழிற்சங்கங்கள் தொழிலாளர்களை திரட்டிப் பிரசாரமும் செய்து வருகின்றன. தொழிலாளர்களும் தயாராகி வருகின்றனர்.

தொழிலாளிகள் மட்டுமின்றி மத்தியதர வர்க்க ஊழியர்களும் பந்துக்கு தயாராகி வருகின்றனர்.

### தயாராகும் ஊழியர்கள்

அதன் தொடர்ச்சியாக பேங்க் ஊழியர்கள், இன்சூரன்ஸ் ஊழியர்கள், கப்பல் கம்பெனி ஊழியர்கள், தனியார் கம்பெனி ஊழியர்கள், பத்திரிகை ஊழியர்கள், இண்டியன் ஏர் லைன்ஸ், ஊழியர்கள் ஏர் இண்டியா ஊழியர்கள்ஆகியோ சங்கத் தலைவர்களின் கூட்டம் நடைபெற்றது. அக் கூட்டத்திற்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மகாராஷ்டிர மாநிலக் கமிட்டி செயலாளர் தோழர் கோலாட்கர் தலைமை வகித்தார்.

அக் கூட்டத்தில் பந்துக்கு மத்திய தர ஊழியர்களின் ஆதரவைத் திரட்ட ஒவ்வொரு ஆபிஸ்களின் முன்பும் கேட் கூட்டங்கள் நடத்துவதென தீர்மானிக்கப்பட்டது.

### மைனரிடிகளுக்கு பாதுகாப்பு

மேலும், மராத்தி மொழி பேசும் மக்களை கர்நாடக மாநிலத்தின் பெல்காமில் தாக்கியதையும் அதேபோல் கன்னட மொழி பேசும் மக்கள் மகாராஷ்டிராவில் தாக்கப் படுவதையும் அக் கூட்டத்தில் கண்டிகப்பட்டது.

சம்பந்தபட்ட கர்நாடக மகாராஷ்டிர அரசாங்கங்கள் அம் மைனரிடி மக்களுக்கு பாதுகாப்பு கொடுக்க வேண்டும் என்றும், அத் தீர்மானம் கூறுகிறது.

மேலும், இண்டியன் ஏர் லைன்ஸ் ஊழியர்கள் தங்கள் நிர்வாகத்தை எதிர்த்து நடத்தும் போராட்டத்துக்கு அக் கூட்டத்தில் ஆதரவுத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

குமரி மாவட்ட

## அரசு பஸ் தொழிலாளர் போராட்ட நிதி குவிகிறது

| | ரூ | பை |
|---|---|---|
| முன் வசூல் | 695 | 00 |
| கோவை-நீலகிரி மாவட்ட சோஷலிஸ்ட் வாலிபர் முன்னணி | 11 | 00 |
| சேலம் ஜில்லா மாக்னிஸைட் லேபர் யூனியன் | 15 | 00 |
| தி. மின்குழு ஊழியர் சங்கக் கிளை உடன்குடி | 35 | 00 |
| தாராபுரம் தாலுகா டெக்டைல்ஸ் லேபர் யூனியன் | 10 | 00 |
| மொத்தம் | 766 | 00 |

## லேட் மெட்டல் இன்டஸ்ட்ரீஸ்நிர்வாகத்தின் கதவடைப்பை எதிர்த்து தொழிலாளர்கள் போராட்டம்

அரியமங்கலம், நவ. 14—

அரியமங்கலம் லேட் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் தொழிலாளர்கள் சிஐடியூ தலைமையில் சங்கம் அமைத்து தங்களது கோரிக்கைகளை எழுப்பிய ஒரே காரணத்திற்காக நிர்வாகம் சட்டவிரோதமாக கதவடைப்பு செய்துள்ளது.

இத் தொழிலாளர்கள், அரியவங்கலம் கிராமத்திலுள்ள தோல் பதனிடும் தொழிலாளர்கள், பீடித் தொழிலாளர்கள், ஈகிள் சீயக்காய்த்தூள் கம்பெனி தொழிலாளிகளின் ஆதரவையும், கிராம மக்கள் ஆதரவையும் திரட்டி போராடி வருகின்றனர்.

கதவடைப்பை நீக்கக் கோரியும், கோரிக்கைக்களுக்கு ஆதரவாகவும் தொழிலாளர்கள் 12-12-73 முதல் உறையூரில் உள்ள கம்பெனி மேனேஜர் வீட்டின் முன்பு ஆர்ப்பாட்டம் நடத்துகின்றனர்.

## வருந்துகிறோம்

வடஆற்காடு மாவட்டம் குடியாத்தம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்களான தோழர்கள் என் இ கிருஷ்ணன், என் இ சம்பந்தம் ஆகியோரது தாயார் திருமதி மீனாட்சிஅம்மாள் கடந்த 30—11—73-ந் தேதி காலமானார்.

தாயைப் பிரிந்த தோழர்களுக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தாலுகா, நகர் கமிட்டி சார்பில் அனுதாபம் தெரிவிக்கப்பட்டது.

## பேட்டை இந்துக்கல்லூரியில் நீக்கப்பட்ட 26 மாணவர்களை மீண்டும் சேர்த்துக்கொள்க

### அரசியல் கட்சிகள் கோரிக்கை

திருநெல்வேலி, டிச. 13—

இங்குள்ள பேட்டை இந்துக் கல்லூரியிலிருந்து கல்லூரி முதல்வரால் 26 மாணவர்கள் நீக்கப்பட்டுள்ளதற்கு இங்குள்ள அரசியல் கட்சிகள் கூட்டாக கண்டனம் தெரிவித்துள்ளன.

கடந்த 8-ந் தேதி, நெல்லை மாவட்ட ஆளும் காங்கிரஸ் கட்சி அலுவலகத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட், இந்திரா காங்கிரஸ், ஸ்தாபன காங்கிரஸ் ஆகிய கட்சிகளின பிரதிநிதிகள் கூட்டம் நடந்தது.

நீக்கப்பட்ட மாணவர்கள் 26 பேரையும் உடனடியாக மீண்டும் கல்லூரியில் சேர்த்துக் கொள்ள வேண்டும், என்று வற்புறுத்தும் தீர்மானம் ஒன்று இக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டது.

தீர்மானத்தின் நகல்கள் மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், முதலமைச்சர், ஆகியோருக்கு அனுப்பப் பட்டன.

இக் கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாவட்டச் செயலாளர் சு. பாலவினாயகம். சண்முகவேல், (ஸ்தாபன காங்கிரஸ்) நெல்லை கணபதி (இந்திரா காங்.) ஆகியோர் கலந்து கொண்டு தீர்மானத்தில் கையொப்பமிட்டுள்ளனர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ்மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு மதுரை-18)அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.